# வாணீபுர வணிகன்.

## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| வாணீபுரத் தரசன் | | |
| மார்த்தாண்ட சேதுபதி<br>அருகபுரத் தரசன் | .... | சரோஜினியை மணக்கவந்த மன்னர்கள். |
| அநந்தநாதன் | .... .... | வாணீபுர வணிகன். |
| பானுசேனன் | ... .... | அநந்தநாதனுடைய நண்பன். |
| சோமேசன்<br>சாம்பநாதன்<br>கிரிஜாநாதன் | ... .... | அநந்தநாதன் பானுசேனன் இருவருக்கும் நண்பர்கள். |
| லீலாதரன் | .... ... | ஜலஜாவின் காதலன். |
| ஷாம்லால் | .... .... | ஒரு மாறுபாடி. |
| தூப்லால் | ... .... | ஒரு மாறுபாடி, ஷாம்லால் நண்பன். |
| லாவண்யகபீரன் | . .... | விதூஷகன், ஷாம்லால் வேலையாள். |
| வயோதிக கபீரன் | ... | லாவண்யன் தகப்பன். |
| கேசரிநாதன் | ... .... | பானு சேனனுடைய வேலையாள். |
| பாலதாசன்<br>ஸ்தாவிரன் | ... ... | சரோஜினியின் வேலையாட்கள். |
| சரோஜினி | ... ... | ஒரு செல்வச் சீமாட்டி. |
| நீலகேசி | .... .... | சரோஜினியின் தோழி. |
| ஜலஜா | .... .... | ஷாம்லாலுடையபெண். |

*வாணீபுரத் தரசனுடைய மந்திரிகள், காவற்காரன், வேலையாட்கள் முதலியோர்.*

***கதை நிகழுடம்:—சிலபாகம் வாணீபுரத்திலும், சிலபாகம், மணிபுரத்திலும்.***

# வாணீபுர வணிகன்

## முதல் அங்கம்.

### முதற் காட்சி

**இடம்—வாணீபுரம், ஒரு வீதி.**

**அநந்தநாதன், சாம்பநாதன், சோமேஸ்வரன்**
**வருகின்றனர்.**

அ. நான் ஒருவாறு யிருப்பதின் காரணம் நானே உண்மையில் அறிகிலேன். இது எனக்கே கஷ்டமா யிருக்கின்றது; உங்களுக்கும் கஷ்டத்தைத் தருவதாக உரைக்கின்றீர். இது என்னை எப்படிப் பிடித்தது, எவ்விதம் தொடர்ந்தது, எப்படி இதற் காளானேன், எதனா லாயது, எப்படி உற்பவித்தது, இவையெல்லாம் இனியே நான் அறியவேண்டும். இந்த விசாரமானது என் அறிவை மழுங்கச்செய்வதினால், என்னை நானே அறிந்துகொள்ளல் கஷ்டமாயிருக்கிறது.

சா. அருகிற் பறந்தோடும் அற்பத் தோணிகள் வணக்கத்துடன் மரியாதை செய்ய, அவைகளை யிகழுவதுபோல் அகன்ற பாய்மரங்களோடு ஆர்கலியின் கனவான்களை நிகர்த்துப் பவனி வரும், உம்முடைய நாவாய்களின்மீது உம் மனம் நாடுகின்றதினால், இவ்வாறு தத்தளிக்கின்றது.

சோ. ஐயா, என் வார்த்தையை நம்பும். என்னுடைய சகல சரக்குகளும் சமுத்திரத்தின் மீதிருப்பதானால், என்னுடைய மனமுழுதும் அவைகளெல்லாம் குறைவின்றி வந்துசேரவேண்டு

மென்று எந்நேரமும் கோரிக்கொண் டிருக்கும்; புல்லைப் பறித்து தெறிந்து காற்றடிக்கும் திசையை எந் நேரமும் கவனித்துக்கொண் டிருப்பேன். படங்களில் எந் நேரமும் பாதைகளையும் துறைமுகங்களையும் பார்த்துக்கொண்டே யிருப்பேன். இதனால் என் சரக்குகளுக்கு ஹானி நேரிடக்கூடும் என்று நான் பயப்படத்தக்க ஒவ்வொரு விஷயமும், சந்தேகமின்றி எனக்கும் சஞ்சலத்தை யுண்டுபண்ணும்.

ச.ரா. காற்றினால் கஞ்சி யாறினால், இக் காற்று பலமாய் அடித்தால், கடலில் என்ன கஷ்டம் நேரிடுமோ என்று எண்ணின வனாகி நடுங்குவேன், ஜுரம் பிடித்தவன்போல. மணலைப் பார்க்கும் பொழுதெல்லாம், கடலில் ஆழமில்லா இடங்களும், மணற் றிடல்களும் எனக்கு நினைவு வந்து, என் செல்வம் நிறைந்த மரக்கலமானது எங்கு சென்று மணற் றிட்டில் அகப் பட்டு, உன்னதமான பாய்மரம் முறிந்து மாண்டு புதைக்கப் படுங்கால், அதற்கு முத்த மிடுவது போல், சாய்கிறதோ என்று மயங்கிடும் என் மனம். கோயிலுக்குச் சென்று கல்லாற் சமைத்த கோபுரத்தைப் பார்ப்பேனாயின், கடல மத்தியில் அதைப் போன்ற உன்னதமான கற் பாறைகளிருந்து, என் மிருதுவான மரக்கலங்களின் பக்கங்களில் தாக்க, அவைகளி லிருந்த திரவியமெல்லாம் திரை கடலின் மீது சிதறுண்டுபோக, சபதிக்கின்ற சமுத்திர ராஜன் பட்டு வஸ்திரங்களை யெல்லாம் உடுத்திக்கொள்ள அபகரிக்க, சற்று முன் அதிக விலை பெற்றிருந்த கப்பல் க்ஷணநேரத்தில் கவைக் குதவாத தாகிப்போகுமே, என்னும் கவலை யன்றோ பாதிக்கும். இவைகளை யெல்லாம் பற்றி யோசிக்கப் புத்தி யிருக்கும்பொழுது, அந்தச் சிந்தையே, அவைகள் அகஸ்மாத்தாய் நேர்ந்தால் எனக்கு என்ன துயரத்தைத் தரும், என்னும் கவலையை உண்டாக்கா திருக்குமா? எனக்கு நீர் காரணம் கூறவேண்டிய தில்லை. அவரது வாணிபத்தினமீது மனது செலவதால் வருத்தத்துட னிருக்கிறார் அந்தோனியோ.

அ. நான் சொல்வதை நம்புங்கள், அப்படியன்று. என் செல்வ மெல்லாம் ஒரே கப்பலிலாவது அல்லது ஒரே யிடத்திற காவது ஏற்றப்பட்டிருக்க வில்லை என்று நான் சந்தோஷப் படுகிறேன். அன்றியும் என் ஐஸ்வரியமானது கேவலம் இவ் வருஷத்திய லாப நஷ்டத்தைப் பொறுத்தது மன்று. ஆகவே என்கப்பொழுதிருக்கும் வருத்தம் வர்த்தக விஷயத்தால் வந்த தன்று.

சோ. சரி, அப்படியானால் காதல் கொண்டிருக்கிறீர் போ.

அ. சீ! சீ!

சோ. காதலு மல்லவா? ஆனால் சந்தோஷமா யில்லாதபடியால் சஞ்சலத்தோ டிருக்கின்றீர் என்போம். இவ்வாறே, நான் துக்கத்துட னில்லாதபடியால், சந்தோஷமா யிருக்கிறேன் என்று சிரித்து குதூகலத்துட னிருக்கக் கூடும் என்றில். அசுவனிதேவர்மீது ஆணைப்படி, அகிலத்தில் என்ன என்ன ஆச்சரியகரமான ஜனங்கள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன! சிலரோ, நாகஸ்வரம் வாசிப்பவனைக் கண்டு இடைவிடாது நகைக்கும் கிளிகளைப்போல், எந் நேரமும் மலர்ந்த கண்க ளுடையராய் நகைத்த வண்ணம் காலம் கழிக்கின்றனர். மற் றும் சிலரோ, பிரம்ம ரிஷி தூர்வாசரே நகைக்கத்தக்க பரி ஹாச வார்த்தையைக் கேட்டபோதிலும், நகைப்பதற் கறி குறியாகப் பல்லைத் திறவாது, முகத்தைச் சுளித்த வண் ணம் வாழ்ந்து வருகின்றனர்.—இதோ வருகின்றார் உமது ஆருயிர்த் தோழன் பானுசேனர், கிரிஜநாதர், லீலாதரர் எங்களுக்கு விடையளியும். அவர்களுடன் சம்பாஷித் தாவது சந்தோஷ மாயிரும்.

சா. உம்மை உற்சாகப்படுத்தும்பொருட்டு இன்னும் கொஞ்ச நேரம் இருந்திருப்பேன், எம்மைப் பார்க்கிலும் ஆப்த நண் பர்களான இவர்கள் வந்திராவிட்டால்.

அ. உங்களுடைய நட்பையும் நான் அருமையாகத்தான் பாவிக் கிறேன். உங்களுக்கேதோ வேலை யிருக்கின்றது, அதன்

பொருட்டுப் போகின்றீர் இந்தப் போக்கைச் சொல்லி, என்றெண்ணுகிறேன்.

பானுசேனன், லீலாதரன், கிரிஜாநாதன்
வருகின்றனர்.

சா. ஐயா, உங்களையெல்லாம் கண்டது, இன்று சுதினம்.

பா. எங்களுக்கும் அப்படியே. எப்பொழுது நாம் எல்லாரும் சந்தோஷமாயக் காலம் கழிப்பது? எந்த சமயம் சொல்லுங்கள்? [illegible] உங்களைக் காண்பதே கடினமா யிருக்கிறதே!— இப்பொழுதே போகவேண்டிய தவசியமா?

சா. உங்களுக்குச் சாவகாசமாய யிருக்கும் சமயம் பார்த்து எங்களுக்குச் சாவகாசத்தை உண்டுபண்ணிக்கொள்கிறோம் உண்மைக் காண.

[சாம்பநாதனும், சோமேஸ்வரனும்
போகிறார்கள்.]

லீ. ஐயா, பானுசேனரே, அநந்தநாதா உமக்கு அகப்பட்டு விட்டபடியால் நாங்க ளிருவரும் விடைபெற்றுக்கொள்ளுகிறோம். சாப்பாட்டு வேளையில் நாம் சந்திக்கவேண்டிய இடத்தைப் பற்றி சற்றே கவனிக்க வேண்டுகிறேன்.

பா. நான் உங்களை எப்படியும் சந்திக்கின்றேன்.

கி. என்ன ஒரு மாதிரி யிருக்கின்றீர், அநந்தநாதரே? உலக விஷயங்களைப்பற்றி அதிகமாகப் பாராட்டுகின்றீர் என்று நினைக்கின்றேன். அதிக கவலைப்பட்டு அதைச் சம்பாதிப்பவர் அதன் சுகத்தை யிழப்பார். என் வார்த்தையை நம்பும், நீர் மிகவும் மாறியிருக்கின்றீர்.

அ. கிரிஜாநாதரே, நான் உலகத்தை உலகமெனவே பாராட்டுகின்றேன்—ஓர் நாடக சாலையாக. இதில் ஒவ்வொரு மனிதனும் அவனவன் ஆட்டத்தை ஆடவேண்டும்; என்னுடைய பாகம் சோககர மானது, அவ்வளவே.

கி. ஆனால் ஹாஸ்ய பாகம் என்னுடையதாக இருக்கட்டும். சந்தோஷத்திலும் சிரிப்பிலும் காலம் கழித்தே எனக்கு வயோதிகம் வரட்டும், துக்கப்பட்டுக்கொண்டே துன்ப மனுபவிப்பதைவிட, மது உண்டு நான் மதர்த்து வாழ்வேனாக! ஒரு மனிதன் தன்னுடலில் உயிரிருக்கும்பொழுதே சிலையில் செதுக்கப்பட்ட தன் பாட்டனின் பிம்பத்தைப்போல் உட்கார்ந்திருப்பானேன்? கண் விழித்த வண்ணம் உறங்குவானேன்? சுருக்கிட்ட முகத்துடன் சும்மா இருந்து சோகையை வரவழைப்பானேன்? அநந்தநாதரே, நான் உமக்கொன்று சொல்லுகிறேன். உம்மீதுள்ள பிரீதியால் இதைச் சொல்லுகிறேன். இவ்வுலகத்தில் சிலர் இருக்கிறார்கள், அவர்கள் பாசி படர்ந்த அசைவற்ற தடாகங்களைப் போல் தங்கள் முகத்தை வைத்துக்கொண்டு, ஆழ்ந்த அறிவும் அளவற்ற ஞானமும் அதிக புத்திக் கூர்மையுமுடையவரென்று மனிதவுலகத்தோர் மதித்திட விரும்பி வேண்டுமென்று மௌனம் சாதிக்கின்றனர். அவர்களைப் பார்த்தால், "நான் முற்றும் உணர்ந்த மௌனி, நான் வாயைத் திறந்தால் நாயும் குலைக்கலாகாது" என்று கூறுவதுபோலிருக்கும். அநந்தநாதரே, இம்மாதிரி மனிதரை நான் நன்கறிவேன். பேசா திருப்பதினாலேயே அவர்கள் பேரறிவாளரென மதிக்கப்படுகிறார்கள். வாயைத் திறந்தால் அவர்கள் புல்லறிவாளரெனப் பூவுலகெங்கும் பிரசித்தமாகும். இதைப்பற்றி இன்னும் கூறுவேன் உம்மிடம் வேறொரு சமயம். நீர் இப்பொழுது இம்மாதிரியாய்ச் சோகை பிடித்தவன் போலிருந்து சுத்த மூடர் பெற விரும்பும் பட்டப் பெயரைப் பெற முயல வேண்டாம்.—லீலாதரரே, வாரும் நாம் போவோம்.—நீர் சுகமாய் இரும் அதுவரையில், மத்தியான போஜனம் கொண்டபின், மற்றப் போதனையையும் கூறி முடிக்கின்றேன்.

லீ. சரி, ஆனால் மத்தியான போஜன காலம்வரையில் உம்மை விட்டுப் பிரிந்திருக்கிறோம். கிரிஜாநாதர் கூறிய மௌன

பிராணிகளில் நானும் ஒருவனாய் இருக்கவேண்டியிருக்கிறது. ஏனெனில், அவர் என்னவோ எனக்குப் பேச இடம் கொடுக்கப்போகிற தில்லை.

கி. சரி, என்னுடன் இன்னும் இரண்டு வருஷம் உமது காலத்தைக் கழியும், உமது நாவின் ஒலியையே, உமது செவி யறியா திருக்கும்படி செய்கிறேன்.

அ. போயும் வாரும், இதைக்கொண்டு வாயாடுவதில் வல்லவனாக முயலுகிறேன்.

கி. உண்மையில் மிகவும் சந்தோஷம். ஏனெனில் மௌனமானது நாவுலர்ந்த நரனிடத்தும், நாணய மற்ற நாரியிடத்துமே சோபிக்கத் தக்கது.

[லீலாதரன், கிரிஜாநாதன் போகிறார்கள்.]

அ. அவன் கூறியதில் ஏதாவ திருக்கின்றதா ?

பா. வீண் வார்த்தையாடுவதில் வாணீபுர முழுவதிலும் கிரிஜா நாதனுக்கு ஒப்பானவர் ஒருவரு மில்லை. அவன் நியாயத்தை அறியவேண்டில், இரண்டு மரக்கால் தவிட்டில் இரண்டு அரிசியைத் தேடிக் கண்டுபிடிப்பதுபோல் பிரயாசைப்பட வேண்டும், நாள் முழுவதும் நாடிக் கண்டுபிடிக்கவேண்டும், அங்ஙனம் கண்டுபிடித்தாலோ, கஷ்டத்திற்குக் கூலி யாகாது.

அ. சரி, அதிருக்கட்டும். எந்தத் தேவியையோ தரிசிக்கவேண்டி இரகசியமாய் யாத்திரை போகவேண்டுமென்று பிரமாணம் செய்திருக்கிறாயே, அது யார் அது? அவளைப்பற்றி இன்று என்னிடம் கூறுவதாக வாக்களித்தனை யல்லவா ?

பா. என் அற்ப வரும்படிக்கு அமைந்தபடி வாழாது, ஆடம்பர மாய்ச் செலவிட்டு என் ஆஸ்தியை அதிகமாய் அழித்திருக் கிறேன் என்பது, அநந்தா, நீ அறியாத விஷயமன்று. அச் செல்வாக்கினின்றும் நீங்கி, செலவைக் குறைத்து வாழ வேண்டியிருக்கின்றதே என்று இப்பொழுது நான் சிந்தைப

படவில்லை. ஊதாரித்தனமாய்ச் செலவழித்துக் காலம் கழித்ததினால் ஏற்பட்டதான பெருங் கடன்களினின்றும், கவுரமாய் என்னை விடுவித்துக்கொள்ளவே, எனக்கு இப்பொழுது பெருங் கவலையாம். அநந்தா, உனக்கே நான் அதிகமாகக் கடன்பட்டிருக்கிறேன், பணத்திலும் பிரீதியிலும். ஆனால் உனக்குள்ள பிரீதியானது, நான் கொடுக்கவேண்டிய கடன்களை ஒழித்து நான் கடைத்தேறுவதற்குச் செய்துள்ள யோசனைகளையும் சூழ்ச்சிகளையும், உன்னிடம் வெளியிடலாமென்று என்னை நம்பும்படிச் செய்கிறது.

அ. பாஹுசேனா, உன்னை நான் வேண்டுகிறேன், உடனே அந்த எண்ணத்தைத் தெரிவி. உன்னை எப்பொழுதும் நான் மதிப்பது போலவே, அதையும் நான் கௌரவமாய் மதிக்கக் கூடுமாயின், என் செல்வமும், நானும், என்னுடைய சகல ஆஸ்தியும், உன் ஆபத்திற்குதவ அடிமைப்பட்டிருக்கின்றன வென்று உறுதியாய் நம்பு.

பா. நான் பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் பருவத்தில், நான் எய்த அம்பு காணாமற்போக, அதைக் கண்டுபிடிக்க வேண்டி, அதே வேகத்துடன் செல்லும்படியான வேறொரு அம்பை அதே திக்காகக் கவனத்துடன் எய்து, இரண்டையும் இழக்கத் துணிந்து இரண்டையும் கண்டெடுத்திருக்கின்றேன். நான் இப்பொழுது கூறப்போகின்ற யோசனையும், இவ்வாறே கபடமறியாப் பேதமையாதலால். பால்யத்தில் நான் செய்ததை உதாரணமாகக் கூறினேன். நான் உனக்குச் செலுத்தவேண்டிய கடன் அதிகமிருக்கிறது, மனம்போன வழி செலவழித்ததினால் அதனைத் தீர்க்க அசக்தனாயிருக்கின்றேன். முதலில் எய்த அம்பின் பின்பாக, மற்றொரு அம்பை எய்ததுபோல், கொடுத்த கடனுடன் இன்னும் கொஞ்சம் கடன் கொடுப்பையாயின், நான் ஜாக்கிரதையாயக் கவனித்து, இரண்டு கடன்களையும் ஒன்றாய்க் கழிக்கவாவது கழிக்கின்றேன், இல்லாவிடின் இரண்டாம் முறை கொடுத்த

தந்தையிட்டும் கொடுத்துவிட்டு, முற்றப்பட்ட கடனுடனிருக்கின்றேன்.

அ. என்னை நீ நன்றாயறிந்திருந்தும் இவ்வகையெல்லாம் பற்றி இவ்வளவு என்னிடம் சுற்று வழியாகப் பேசிக் காலத்தை விருதாவில் கழிப்பானேன்? நீ இவ்வாறு என் சக்தியுள்ளவு உனக்கு உதவுவேனோ என்னவோ என்று சந்தேகம் கொள்வது, என்னுடைய ஆஸ்தி முழுவதையும் நீ அழிப்பதைப் பார்க்கிலும், பெரிய குற்றமிழைப்பதாகும் எனக்கு; சந்தேகமின்றி, என்னால் செய்யக் கூடுமென்று உன் புத்தியில் என்ன படுகின்றதோ, அதை இந்த க்ஷணம் வாய் திறந்து சொல். அதைச் செய்து முடிப்பது என் பாரம். ஆகவே, சொல் உடனே.

பா. மணிபுரத்தில் ஓர் கன்னிகை யிருக்கின்றாள், மிகுந்த செல்வவதி, மிகுந்த ரூபவதி. அந்த ரூபத்திலும் மேம்பட்ட ஆச்சரியகரமான குணவதி. சில சமயங்களில் அப் பெண்மணி என்னைத் தன் கடைக் கண்ணினால் காதலோடு பார்த்துத் தன் கருத்தை யறிவித்திருக்கின்றாள். அவள் பெயர் சீராரிணி, மிதிலை மன்னன் புதல்வி ஸ்ரீராமன் மனைவிக்குக் குறைந்தவளல்ல. பார் முழுவதும் அவள் பெருமை பரவியிருக்கின்றது, நான்கு திக்குகளிலிருந்தும் இவளை நாயகியாகப் பெற நாநிலத்துச் சீமான்களெல்லாம் போய்ச் சேருகிறார்கள். ஜானகியின் பேரழகைக் கேட்டு மன்னர் மன்னரெல்லாம் மிதிலையைச் சேர்ந்ததைப்போல, இக்கட்டழகியைக் கடிமணம் புரியவரும் கனவான்களால், மணிபுரம் மிதிலை ஆயது. அந்தோ, அவர்களுக்கெதிராக நானுமொருவனாக நிற்க, எனக்கு வகை யிருக்குமாயின், நான் வேண்டியதைப் பெற்று பெரும் பாக்கிய சாலியாவேன் என்பது திண்ணமென்று, என் மனத்தில் ஏதோ தோன்றுகிறது.

அ. என் செல்வமெல்லாம் செறி கடலின்மீதிருக்கின்றதென்பது நீ அறிந்த விஷயமே. என்னிடமோ பணமில்லை, வைத்

துக் கடன் வாங்கப் பொருளு மில்லை. ஆகையால் நீ உடனே புறப்பட்டுப் போய் என் நாணயத்தின்மீது, வாணீபுரத்தில் எவ்வளவு கடன் வாங்க முடியுமோ பார். எவ்வளவு முடியுமோ, அவ்வளவு சேகரித்து, மணிபுரம் போய் அந்த சரோஜினியைக் காண உடனே புறப்படுவாய். பணம் கிடைக்கத் தக்க இடத்திற்கு உடனே புறப்பட்டுப் போய் விசாரி. நானும் அவ்வாறே செய்கின்றேன். எனக்காகவென்று சொல்லி வாங்கினும் சரிதான், என் நாணயத்தின் மீது வாங்கினும் சரியே, எனக்கொரு ஆட்சேபணையு மில்லை. (போகிறார்கள்

**காட்சி முடிகிறது**

---

## இரண்டாம் காட்சி

*இடம்:—மணிபுரம் சரோஜினியின் வீட்டிலோர் அறை*

**சரோஜினியும், நீலகேசியும், வருகிறார்கள்.**

ச. உண்மையில் நீலகேசி, என் சிற்றுடலுக்கு இப் பெரிய உலகத்தினிடத்து வெறுப்புண்டாயிருக்கிறது.

நீ. என் அம்மணி, உமக்கு எவ்வளவு நற்பாக்கிய மிருக்கின்றதோ அத்தனைத் துர்ப்பாக்கிய மிருக்குமாயின், நீர் அவ்வாறு வெறுப்படைதல் நியாயமாகும். ஆயினும் எனக்குத் தெரிந்தவரையில், அதிகமாய்ப் புசிப்பவர்களும் ஆகாரமின்றி வருந்துவோர்களைப்போலவே வியாதிக்கு ஆளாகிறார்கள். ஆகவே, இரண்டு மின்றி நடு நிலையிலிருப்பது சுவல்பமான சுகமன்று; அபரிமிதம் அதி சீக்கிரத்தில் மூப்பை அடைவிக்கும். மிதமா யிருத்தலே நெடுநாள் வாழ்க்கைக்கு அநுகுணமாம்.

ச. நல்ல பழமொழிகள், கேட்பதற்கு அழகா யிருக்கின்றன.

நீ. அதன்படி நடந்தால் இன்னும் அழகா யிருக்கும்.

ச. செய்யவேண்டியது இன்னது என்று அறிவது எவ்வளவு சுலபமோ, அவ்வளவு சுலபமாயிருந்தால் அதன்படி செய்வது, கூரை வீடுகளெல்லாம் குபேரன் மாளிகைகளாகும், குடிசைகளெல்லாம் கோபுரங்களாகிவிடும். தான் போதிக்கும் வண்ணம் நடக்கின்றவனே சத்குரு வாவான். நடக்க வேண்டிய ஒழுக்கத்தைப்பற்றி நாலைந்து பேருக்கு நான் உபதேசம் செய்வது சுலபம், அந்த நாலைந்து பெயரில் ஒருத்தியாய், என் உபதேசப்படி நானே நடத்தல்தான் கஷ்டம். அறிவானது, நமது இந்திரியங்களை அடக்குதற்பொருட்டு, கோட்பாடுகளை ஏற்படுத்தலாம். ஆனால் அடக்க முடியா மனமானது, அக்கோட்பாடுகளையெல்லாம் குதித்துத் தாண்டிப்போம். யௌவனமென்னும் பித்தம் பிடித்த முயலானது, அடக்கியாள விரும்பும் அறிவென்னும் வலைக்குள்கப்படாது பிறிப்போம். ஆயினும் இந்த நியாயங்களெல்லாம் நான் ஒரு கணவனை வரிப்பதற்குப் பிரயோஜனப்படுவன வல்ல:— ஐயோ! ஈசனே! நான் வரிப்பதாவது? விரும்பிய புருஷனை வரிப்பதற்கும், வேண்டாப் புருஷனை வெறுப்பதற்கும் எனக்கென்ன சுதந்தர முண்டு? உயிரோடிருக்கின்ற ஒரு பெண்ணின் மனமானது இறந்துபோன அவளது தந்தையின் வாக்கினால் இவ்வாறு கட்டப்பட்டிருக்கின்றது!—நீலகேசி, ஒரு புருஷனை வரிக்கவும் மற்றவர்களை வெறுக்கவும் சுதந்தரமில்லா திருப்பது பெரும் துர்ப்பாக்கிய மல்லவா?

ர. உம்முடைய பிதா மிகவும் நற்குணமுடையவர், அப்படிப்பட்ட புண்ணியாத்மாக்களுக்கு, அந்திய காலத்தில் மனத்தில் தோன்றுவது தவறாகாது. ஆகவே அவர் ஏற்படுத்திய, பொன் வெள்ளி ஈயத்தாலாகிய இம் மூன்று பெட்டிகளுள், அவர் அர்த்தத்தைத் தெரிந்தெடுப்பவனே, உம்மை மணக்கவேண்டியிருப்பதால், 'உமது காதலுக்குரிய கணவனன்றி, வேறொருவனும் சரியாகக் கண்டெடுக்கமாட்டான் என்பது திண்ணம். அதிருக்கட்டும்—இப்பொ

முது உமமை வரிக்க வந்திருக்கும சீமானகளைபபறறி உமது மனம எபபடி இச்சை கொணடிருககிறது ?

ச. நீ அவர்களின் பெயரை ஒவ்வொன்ருகச் சொல்லிக்கொண்டு வா. அபபடி நீ சொல்லிக்கொண்டுவருமபொழுது அவர்களை நான வர்ணித்துக்கொணடு வருகிறேன. அந்த வர்ணனையி னின்றும என் மனத்தி லிச்சையை யறிந்துகொள.

நீ. முதலில், நேபாளத்து அரச குமார னிருக்கின்ருர்.

ச. அவரா ? அவர ஒரு குதிரைக்குட்டியே. தன குதிரையைப பற்றிப் பேசுவது தவிர வேருென்றும் அறியார். தன் குதிரைகருத் தானே லாடம அடிக்கத் தெரியும என்பதை, தன் னிடமுள்ள நற் குணங்களில் முக்கியமானதாக மதிக்கிருர். அவர் தாயார் தனித் திருந்த காலத்தில் கருமான ஒருவன அரண்மனைக்குட் சென்றிருக்க வேண்டுமென்று நினைக்கி றேன்.

நீ. அதற்குப் பிறகு, பாடலீபுரத்துப பிரபு.

ச. முகத்தைச் சுளிப்பது தவிர ஜகத்தில்வேறொன்றும் செய்வ தில்லை அவர. " என்னை விரும்பாவிட்டால், உன்னிஷ்டம் " என்பதுபோல் முகத்தை வைத்துக்கொண்டிருக்கிருர். வேடிக்கைக் கதைகளைக் கேட்கினரு, நகைப பென்பதைக் காணும முகத்தில் ; இளமவயதிலேயே இபபடி ஒழுங்கற்ற சோகத்தோ டிருபபவர், முது வயதில் முறறும் துறந்த வேதாந்தி யாவா என்று அஞ்சுகிறேன. இவ் விருவரிலொரு வரை நான் விவாகஞ்செயதுகொளவதைவிட, இடு காட்டி லுள்ள பிரேத மொன்றை மணபபேன். இவாகளிட மிருந்து ஈசன் என்னைக் காபபாற்றுவாராக !

நீ. பஸ்சிமதேசத்துப பிரபு லாவண்யருக்கென்ன சொல்லுகிறீர?

ச. ஈசன மனிதனுக அவரைச் சிருஷ்டித்தார் ; ஆகவே நாமும அவரை மனிதனுகப பாவிபபோம. உண்மையில பரிஹாசம செய்வது பாபமென நான் அறிவேன். ஆயினும இவரை

ஐயோ! நான் என்னென்று உரைப்பது? குதிரைப் பயித்தியத்தில் நேபாளத் தரச குமாரனுக்கு மேம்பட்டிருக்கின்றார். கடு கடுத்த முகத்திலோ, பாடலீ புரத்துப் பிரபுவைத் தோற்கடிக்கிறார். எல்லா மனிதருடைய துர்க்குணங்களும் குடிகொண் டிருக்கின்றன அவரிடம். ஆயினும், அவரை ஒரு மனிதனைக் கூறக்கூடாது. குயில் பாடினால் கூத்தாட ஆரம்பிக்கின்றார், தனனிழலுடன் போர்புரிவார். அவரைக் கலியாணம் செய்துகொண்டால், இருபது பெயரை நான் கலியாணம் செய்துகொண்டதாகும். அவர் என்னை வெறுத்தாலும் நான் பொறுப்பேன். அவர் என்மீது பித்தம்பிடித்த படி காதல் கொண்டாலும், அதற்குப் பிரதி செய்ய வகை யறியேன்.

நீ. சிங்கள தேசத்திலிருந்து வந்த இளஞ்சீமான பறகுணருக் கென்ன சொல்லுகின்றீர்?

ச. அவரிடம் நான் ஒன்றும் கூறுவ தில்லை என்று உனக்குத் தெரியுமே? அவர் பேச்சு எனக்குத் தெரியாது, என் பேச்சு அவருக்குத் தெரியாது. அவருக்குத் தமிழ்தெலுங்கு கன்னடம் மலையாளம் ஒன்றுந் தெரியாது. எனக்கோ அவரது சிங்கள பாஷையில் ஒரு பதமும் தெரியாதென்று, நீயே நியாயஸ்தலத்தில் நின்று சத்தியம் செய்வாய். ஆள், உருவத்தில், ஒழுங்காய்த்தா னிருக்கிறார். ஆயினும், ஐயோ! ஊமையுடன் யார் வார்த்தையாடுவது? அவருடைய உடை என்ன அலங்கோலமா யிருக்கிறது பார்த்தனையா? அவர் அங்கியை ஆந்திராபாத்திலும், தலைக் குடையைத் தக்காணத்திலும், அங்கவஸ்திரத்தை வங்க தேசத்திலும், நடை யொழுக்கங்களை நாலு தேசங்களிலும் விலைக்கு வாங்கியிருக்கவேண்டும்.

நீ. அவரது தேசத்துக்குப் பக்கத்துள்ள சகேதநாட்டுப் பிரபுவைப்பற்றி என்ன எண்ணுகின்றீர்?

ச. அயலாரிடத்து அவருக்கு அன்பு அதிகமுண்டு என்றே, சிங்கள தேசத்துச் சீமானிடமிருந்து கன்னத்தில் ஒரு அறை

கடன் வாங்கி இருக்கிறார். இப்பொழுது எனக்குச் சக்தி யில்லை, சக்தி வந்தவுடன் கடனைத் தீர்க்கிறேனென, என்று சபதம் செய்திருக்கிறார். அதற்கு ஜாமீனை இருந்து, பஸ்சிம நாட்டுப் பிரபு மற்றொரு கன்னத்தில் ஒரு அறை முத்திரை வைத்திருக்கிறார் என எண்ணுகின்றேன.

நீ. சௌராஷ்டிரத்தை யாளும் சேரமான மருகனைப்பற்றி என்ன எண்ணுகின்றீர் ?

ச. அவர் காலையில் சாதாரணமா யிருக்கும்பொழுதே, கடு வெறுப்பா யிருக்கின்றது. மது பானம் செய்தபின் மத்தி யானத்தில் யோசிக்க வேண்டியதே யில்லை. நல்ல குணத்தி லிருக்கும்போதே நர ஜன்மத்துடன சேர்க்க லாகாது; கெட்ட குணம வந்துவிட்டாலோ, காட்டு மிருகத்திற்கும கடைப்பட்டவர்தான். எனக்கு எப்படிப்பட்ட கேடுகெட்ட ஸ்திதி சம்பவித்தபோதிலும அவர் கையிற்படாதபடி கடைத்தேறும உபாயத்தைக் கண்டுபிடிப்பேனெனக் கோரு கிறேன்.

நீ. ஒருவேளை பெட்டிகளுள தெரிந்தெடுப்பதாகக் கூறி, சரி யான பெட்டியைக் கோருவா ராயின, அப்பொழுது நீர் அவரைக் கணவனாக ஒப்புக்கொள்ளாவிட்டால், உமது தந்தையின வாக்கைத் தட்டியதாகுமே ?

ச. ஆகவே அப்படிப்பட்ட கெடுதி ஒன்றும நேரிடா வண்ணம, தவறான பெட்டி யொன்றினமீது, ஒரு பெரிய புட்டி கொழும்பு சாராயத்தை வை. அந்தப் பெட்டிக்குள் பிசாசே யிருந்தாலும, மேலே அந்தப் புட்டியைக் காணபாராயின் அதைக் கோருவார் என்பதற்குச் சந்தேக மில்லை. இப் பஞ்சையை மணம் புரிவதைவிடப் பாரில் நான வேறு எதை யும செய்வேன.

நீ. அம்மா, இவர்களில் எவரையாவது மணக்கவேண்டி வருமே என்று தாம் ஒன்றும அஞ்ச வேண்டிய தில்லை. அவர்கள் தங்களது தீர்மானங்களை எனக்குத் தெரிவித்திருக்கிறார்கள்;

அதென்னவென்றால், உமமுடைய தகபபனா ஏறபடுத்திய இந்தப பெட்டிகள பரிசோதனையா லனறி, வேறுவிதத்தால உமமை விவாகஞ்செய்துகொள்வது அசாத்தியமானல், உம மைத் தொநதரவு செயயாது பேசாமல் வந்த வழி பாரத்து, தங்கள் தஙகள் வீடு போயச் சேரவேண்டு மென்பதே.

ச. ஔவையாரைபபோல், அத்தனைக கிழவியானாலும, என தகப்பனா மனப்படி எனனை யாராவது மணம புரிநதா லொழிய, கன்னிகையாகவே என காலத்தைதக கழித்து மரிப பேன். இவர்களெல்லாம அவவளவாவது அறி வுளளவா களா யிருக்கின்றார்களே, அது எனககு மிகவும சந்தோஷம. அவர்களில் ஒவவொருவரும எபபடியாவது தொலைந்தால் போதுமென் றிருக்கின்ற தெனககு.—சுவாமியின் கடாடசத் தினல் சவுக்கியமாயச் சீக்கிரம வீடுபோயச் சேருவார்க ளாக!

நீ. அமமணி, உம்முடைய தந்தையின காலத்தில், வாணீபுரத்தி லிருந்து ஒரு பிரபு இஙகு வநதிருநதாரே, ஞாபக மிருக கினறதா? நல்ல வித்வான, சுத்த வீரன், மகத தேசத்து மந்திரியுடன வந்திருந்தாரே?

ச. ஆம, ஆம, அவர் பெயா பானுசேனா,—அபபடித்தான அவர் அழைக்கபபடடதாக எனககு ஞாபகம.

நீ. ஆம, உண்மைதான். அமமணி, நான என் பேதைக கண களைக் கொணடு பார்த்தவர்களுககுள, அவாதான் கட்டழ கிக்கேறற காதலன்.

ச. அவர் எனக்கு நன்றாய ஞாபக மிருக்கிறது, நீ கூறிய புகழச் சிக்குத் தகுந்தவரே.

ஒரு வேலையாள் வருகிறான்

என்ன இப்பொழுது? என்ன சமாசாரம?

வே. புதிதாய வந்த நான்கு பெயரும தமமிடம விடைபெற்றுச் செல்லக் காத்துக்கொண் டிருக்கினறார்கள். அன்றியும ஐந்

தாவது ஆசாமி மறவ நாட்டின் மன்னனிடமிருந்து ஒரு தூதன், தன் எஜமானன் தமமைக்காண இன்றிரவு வருவதாகச் சேதி கொண்டுவந்திருக்கிறன்.

மற்ற நால்வருக்கும் எவ்வளவு மன சந்துஷ்டியுடன போகும்படி விடையளிக்கினறேனோ அவ்வளவு சந்தோஷத்துடன் இந்த ஐந்தாவது புருஷனை வரவழைபபேனாயின், அவர் வருகைககாக நான சந்தோஷபபட வேணடியதே. தேவர்களின் குணமும் ராடசதாகளின் முகமு முடையவரா யிருந்தால், அவர் எனககுக் கணவனுவதைவிட ஆசாரியனுயிருக்குமபடி கோருவேன—வாராய, நீலகேசி.—அடே, நீ போமுன்பு.—ஒரு காதலனை வெளியில தளளி, கதவைத் தாளிடு முன் மற்றொருவன வந்து கதவைத் தட்டுகிறன்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது

---

## மூன்றும் காட்சி

### இடம்.—வாணிபுரம் வணிகர் வீதி.

பானுசேனன், ஷாம்லால் வருகிறார்கள்.

ஷா. மூவாயிரம பொன.—சரி.

பா. ஆம, ஐயா,—மூன்று மாதத்திற்கு

ஷா. மூனறு மாதத்திற்கு.—சரி.

பா. அதறகாக—நான் சொனனபடி, அநந்தநாதர் ஜாமீனுக இருபபார்.

ஷா. அநந்தநாதர் ஜாமீனுக இருப்பார்.—சரி.

பா. எனக்கு உதவி புரிவீரா? எனக்குச் சந்தோஷம உண்டுபண்ணுவீரா? உமது உத்தரம நான அறியலாமா?

ஷா. மூவாயிரம பொன, மூன்று மாதத்திறகு, அதறகாக அநந்த நாதர் ஜாமீன.

பா. அதறகு உமது பதில ?

ஷா. அநந்தநாதர், நல்ல மனுஷயனதான.

பா. அபபடி யல்லவென்று ஏதேனும அவதூறு கேளவிபபட்டிருக்கிறீரா ?

ஷா. ஹூ! இல்லை, இல்லை, இல்லை, இல்லை!—நான நலல மனுஷயன என்று சொல்வதனது அர்த்தமென்னவென்ருல் அவர் பொறுப்பான ஜாமீன என்று நான எண்ணுவதாக நீ அறியும பொருட்டே.—ஆயினும அவருடைய சொத்துக்களெல்லாம கொஞசம சந்தேகத்திற கிடமானது. அவருடைய ஒரு நாவாய திரிபுரததுக்குப்போயிருக்கிறது. இனனொன்று வங்காளம போயிருக்கிறது. அன்றியும ரேவு துறையில நான அறிந்தபடி, மூனருவது நாவாய நாவல தீபத்திலும நானகாவது சிங்களத்திறகும போயிருக்கின்றது, இன்னும மறறப பொருளகளை யெல்லாம ஆங்காங்கு இறைத்திருக கிருர யோசனையில்லாமல். ஆயினும மரக்கலங்களெல்லாம மரத்தாலானவை, மாலுமிகளோ மனிதர்களதான, நிலத்திலும எலிக ளிருக்கின்றன, சமுத்திரத்திலும எலிகளிருக கின்றன, பூமியிலும திருடர்களிருக்கிருர்கள, தண்ணீரின பேரிலும திருடர்களிருக்கிருர்கள; அதாவது கபபல கொள ளைக்காரர்களிருக்கிருர்கள, இதல்லாமல நீரினுல் அபாயம, காற்றினுல அபாயம, கறபாறைகளினுல் அபாயம, எல்லா மிருக்கின்றன. இருந்தாலும அந்த மனுஷயன பொறுப பான ஜாமீனதான. மூவாயிரம பொன—அவருடைய பத்தி ரத்தின்மீது கடன் கொடுக்கலாம என்று எண்ணுகிறேன.

பா. நிசசயமாகச செய்யலாம, சந்தேகமின்றி.

ஷா. எனக்கு நிச்சய மாகவேண்டும சந்தேகமின்றி, அப்படிச் செய்யலாமென்று நிசசயிக்கும பொருட்டே நான இப

பொழுது நன்றாக யோசிக்கவேண்டும்:—நான் அநந்தநாத ருடன் நேரிற பேசக்கூடுமோ?

பா. இன்றைத்தினம் எங்களுடன் போஜனம் செய்யப் பிரிய மிருக்குமாயின.

ஷா. ஆமாம், வந்து பன்றியின் மாம்சத்தைப் புசிப்பதற்கு! உங்களுடைய சுவாமி முன்னொருவது அவதாரம் எடுத்தாரே, அதன் இறைச்சியைத் தின்பதற்கு! நான் உங்களிடம் விலைக்கு வாங்குவேன், உங்களுக்கு விற்பேன், உங்களோடு பேசு வேன், உங்களோடு நடப்பேன், இன்னும் இவைபோன் றனவெல்லாம் செய்வேன். ஆனால் உங்களோடு புசியேன், உங்களுடன் குடியேன், உங்களுடன் தொழேன்—என்ன விசேஷம் ஐயா, ரேவில்? யார் அது, இங்கு வருகிறது?

அநந்தநாதன் வருகிறான்

பா. இவர்தான் அநந்தநாதர்.

ஷா. [தனக்குள்] இச்சகம் பேசித் திரியும் இந்தத் தண்டுவோனைப் போன்ற இவன் முகத்தைப்பார்! இந்து மதத்தை முதல் பற்றி இவனை வெறுக்கின்றேன் நான். இதைப்பார்க்கிலும் இவனை அதிகமாய் வெறுப்பதற்கு இன்னொரு காரண முண்டு, புத்தி ஈனத்தினால், வட்டிவாங்காமல் கடன் கொடுத்து, வாணீபுர மெங்கும் நாங்கள் செய்கிற வட்டி லாவாதேவியைப் பாழாக்குகின்றான். ஒருதரம் இவன் குடுமி என் கையிலகப்பட்டால், எத்தனையோ நாளாயிருக்கும் என் துவேஷத்தை யெல்லாம் திருப்தியாய்த் தீர்த்துக்கொள் வேன். எங்களுடைய பரிசுத்தமான ஜாதியாரிது துவே ஷம் பாராட்டுகின்றான். அன்றியும் நான் கஷ்டப்பட்டுச் சம்பா திப்பதை வட்டி யென்று பெயரிட்டிழித்து, என்னையும் என் வியாபாரத்தையும், எல்லோரா முன்னிலையிலும், அனேக வியாபாரிகள் ஒருங்கு சேரும் பயிரங்கமான இடங்களிலும்,

ஹீனம் செய்கின்றான்.—இவனை நான் சும்மா விட்டேனாயின் என் ஜாதியெல்லாம் நாசமாய்ப் போகட்டும்!

பா. ஷாமலால், கேட்கிறதா?

ஷா. தற்காலம் என்னிடத்திலுள்ள சொத்தைப்பற்றி கணக்கிட்டுப் பார்க்கிறேன். இப்பொழுது எனக்கு ஞாபகமிருக்கிற வரையில், உடனே மூவாயிரம் பொன் மொத்தமாய்ச் சேகரிக்க என்னால் முடியாது. ஆயினும் அதைப்பற்றி என்ன? எங்கள் ஜாதியான தூபலால் என்னும் செல்வவந்த முதிய யூதன், எனக்குத் தருவான்.—ஆயினும் கொஞ்சம் பொறும்! எத்தனை மாதத்திற்கு வேண்டுமென்று விரும்புகிறீர்? [அந்தநாதனைப் பார்த்து] மஹாப்பிரபு, க்ஷேமமாயிருப்பீராக! பிரபு, தங்களைப்பற்றித்தான் இப்பொழுது பேசிக்கொண்டிருந்தோம் கடைசியில் நாங்கள்.

அ. ஷாமலால், நான் வட்டிக்காக கடன் கொடுப்பதுமில்லை வாங்குவதுமில்லை யென்றாலும், எனது நண்பனுடைய அவசியமான குறையைத் தீர்க்கும் பொருட்டு, என் ஏற்பாட்டினின்றும் வழுவலானேன்.—உனக்கெவ்வளவு வேண்டுமென்பதைத் தெரிவித்தனையா இவனுக்கு?

ஷா. ஆம், ஆம்; மூவாயிரம் பொன்.

அ. மூன்று மாதத்திற்கு.

பா. அதை மறந்தேன்.—மூன்று மாதத்திற்கு.—நீர் அப்படித்தான் சொன்னீர். சரி ஆனால், உமது ஜாமீன்.—ஏதோ பார்க்கின்றேன்.—ஆனால் ஒரு வார்த்தை கேட்பீராக; நீர் வட்டிக்காக கடன் கொடுப்பது மில்லை வாங்குவது மில்லை யென்று கூறினதாக எனக்கு ஞாபகம்.

அ. ஆம், என் வழக்கமல்ல அது.

ஷா. திகம்பரர் தன்னுடைய மாமன் ஸ்வேதாம்பரருடைய ஆடுமாடுகளை மேய்த்தபொழுது—இந்த திகம்பரர் பரிசுத்தமான

திரத்தங்கரருடைய மூன்றும் கால்—ஆம் மூன்றும் கால் தான.—

அ. அவரைப்பற்றி என்ன ? அவர் வட்டி வாங்கினரா ?

ஷா. இல்லை; வட்டி வாங்க இல்லை. அதாவது, நீங்கள் சொல்லு கிறபடி, நேராக வட்டி வாங்கவில்லை. அவா செய்ததைக் கவனியும் நன்று. தன் வச மிருந்தபொழுது, அந்த ஆடு மாடு கள போட்ட குட்டிகளை யெல்லாம் எடுத்துக்கொண்டார ; அபிவிர்த்தி யடைவதற்கு இது ஒரு மார்க்கம ; அவருக்கு அருகன் கருணையு முண்டாயிற்று. பொருளை விர்த்தி செய்தல் நன்மையே, திருட்டு வழியாய் அங்ஙனம செய்யா திருப்பார்களாயின.

அ. அத் திகமபரர் தான் மேற்கொண்ட ஊழியத்தின் கூலிக்காக அதைப் பெற்றார். உங்களுடைய வேத சாஸ்திரத்தில வட்டி வாங்குவதற்கு இது ஒரு நியாயமாக எடுத்துக் கூறியிருக்கின்றதா என்ன ? அல்லது உமது வெள்ளியும பொன னும ஆடு மாடுகளா, தெய்வச் செயலால் விர்த்தியாவதற்கு?

ஷா. அது எனக்குத் தெரியாது, ஆடு மாடுகள விர்த்தியாவதைப்போல் அத்தனை வேகமாய விர்த்தியாகும்படி செய்கிறேன் அவைகளை நான்.—ஐயா, ஆயினும நான சொலவதைக் கவனியும.—

அ. பார்த்தனையா பானுசேனா, இநத நியாயத்தை ? தாம சாஸ திரஙகளைப பேய்களும் எடுத்துரைக்கும தமது காரியத்தின பொருட்டு, தூயதான வேத வாக்கியத்தைத் தனக சுத் தாட்சியாக எடுத்துக் கூறும துராத்மாவானவன, நகை முகமுடைய பாதகனைப்போன் றிருக்கிறான,—வெளிக்கு அழகாயும, உள்ளே அழுகியு மிருக்கும அத்திப பழத்தை ஒத் திருக்கின்றான. கபடமானது மேலுக்கு என்ன நல்ல வேஷம தரிக்கின்றது !

ஷா. மூவாயிரம் பொன்—பெருத்த தொகை யாகும். பன்னிரண்டு மாதங்களில் மூன்று—என்ன வட்டி யாகிறதோ பார்க்கிறேன்.

அ. என்ன, ஷாமலால் ? எங்களுக் குதவுவையா ?

ஷா. மஹாப்ரபு, அநந்தநாதரே, பன முறை பகிரங்கமாகப் பல ரறிய ரேவு துறையில் என்னை, என் பணத்தின்பொருட்டும், நான் வாங்கும் வட்டியின்பொருட்டும், வைதிருக்கின்றீர். அந்த வசை மொழிகளையெல்லாம் பொறுமையாகப் பொறுத்திருக்கின்றேன் பதில் பேசாது. அந்தப் பொறுமை எங்கள் ஜாதியாருக்கு ஓர் அறி குறியாம். என்னை நாஸ்திகனென்றும், கழுத்தை யறுக்கும் பாதகனென்றும் திட்டியிருக்கின்றீர், என்னுடைய ஜைன ஆடையின்மீது காரியுமிழ்ந்திருக்கின்றீர். எதற்காக ? எல்லாம் என் பொருளை என்னிச்சைப்படி உபயோகிப்பதற்காக ! இப்பொழுதோ, உங்களுக்கு என் உதவி வேண்டியிருப்பதாகக் காண்கின்றது. ஆகவே அதற்காக என்னிடம் வருகின்றீர். வந்து, " ஷாமலால், எங்களுக்குப் பணம் வேண்டும்." என்கிறீர்,—அங்ஙனம் சொல்கிறீர்—நீர், என் தாடியின்மீது காரியுமிழ்ந்து, ஏழை நாயை உதைத்து உமது வாசற்படிக்கு வெளியே தள்ளுவதுபோல் என்னை உதைத்த, நீர், உங்களுக்குப் பணம் வேண்டும். நான் உங்களுக் கென்ன பதில் சொல்லவேண்டும் ? " நாயிடம் பணமேது ? கேடுகெட்ட நாய் மூவாயிரம் பொன் கடன் கொடுக்குமா ?" என்று சொல்லவேண்டாமா ? அல்லது முழந்தா ளிட்டுப் பணிந்து, அடிமையைப்போல் மெல்லிய வார்த்தைகளால், வாய் பொத்தி, மிருதுவாய தாழ்மையுடன், இவ்வாறு சொல்வதா ? " கனம்பொருந்திய ஐயா, சுவாமி ! போன புதன் கிழமை என்மீது காரி யுமிழ்ந்தீர் ! அன்றைத்தினம் என்னை உதைத்துத் தள்ளினீர் ! இன் னொரு முறை என்னை நாயென் றழைத்தீர்! இத்தனை மரியாதையெல்லாம் நீர்

எனக்குச் செய்ததற்காக, இவ்வளவு பணத்தை உமக்குக் கடன் கொடுக்கிறேன்," என்று கூறுவதா?—

அ. மறுபடியும் நானுன்னை அவ்வாறு வைது, காரி யுமிழ்ந்து காலா லுதைத்தாலும் உதைப்பேன, நீ இந்தப் பணத்தைக் கடனாகக் கொடுப்பதானால், உன் சிநேகிதருக்குக் கொடுப்பதுபோல் கொடாதே.—எந்த மனிதன் தன் சிநேகிதனுக்குத் தன் பணத்தைக் கடன் கொடுத்து வட்டி வாங்கி அதை விருத்தி செய்தான்?—உன்னுடைய பகைவனுக்குக் கடன் கொடுப்பதுபோல கொடு. ஏனெனில், அவன் தவறிப்போனால் உன மனத்தில் கஷ்ட மில்லாமல் அபராதத்தை அவனிடம் வசூல் செய்யலாம் நீ.

ஷா. ஏனையா! இதோ பாரும்.—இத்தனைக் கோபமேன உமக்கு? நான உங்களோடு சினேகமாய், உங்கள் பிரீதியைப் பெற்று எனனை இழிபடச் செய்த அவமானத்தை யெல்லாம் மறந்து, உங்கள் தற்காலக் குறையைத் தீர்க்க விரும்புகிறேன்; என பணத்திற்கு எனக்கு வட்டி அரைக் காசும் வேண்டாம் என்று சொன்னால், நீர் கேட்கமாட்டேனென்கிறீர். நான செய்யக் கருதிய பட்சம் இதுவே.

பா. இது பெரிய உபகார மாகும்.

ஷா. இந்த உபகாரம் எப்படியும் செய்வேன், வாருங்கள் என்னுடன, கணக்கனிடம் போவோம். அங்கு நீர் ஒரு வெள்ளிப் பத்திரம் எழுதிக் கொடும்; அதில் வேடிக்கையாகத்தமாய், "இன்ன தினத்தில், இன்ன இடத்தில், ஏற்பாட்டின்படி அதில கண்ட தொகை அல்லது தொகைகளை நீர் எனக்குத் திருப்பிக் கொடுக்காவிட்டால், அதற்கு அபராதம் உமமுடைய உடலினின்றும் எனக்கு இஷ்டமான இடத்தில் சரியாக ஒரு ராத்தல மாமிசத்தை நான அறுத்து எடுத்துக் கொள்ளக்கடவேன்" என்று எழுதுவோம்.

அ. சரிதான், அப்படியே ஆகட்டும். அந்தப் பத்திரத்திற் கையெழுத்து செய்து, மாறுபாடியிடத்தில் மட்டிலாக கருணை உளதெனக் கூறுகிறேன்.

பா. இம்மாதிரி பத்திரத்தை எனக்காக நீ எழுதிக் கொடுக்க வேண்டாம். அதைவிட என் கஷ்டத்துடன எப்படியாவது நான் வாழுவேன்.

அ. என்ன ! ஏன் பயபபடுகின்றாய், பானுசேனு ? நான் அபராதத்திற்கு ஆளாகமாட்டேன. இன்னும இரணடு மாதங்களுக்குள—அதாவது இநதப பத்திரத் தவணைககு ஒரு மாதம முன்னதாகவே—இந்தப் பத்திரத் தொகைககுப பதின் மடஙகு எனனிடம வநதுசேரவேணடி யிருககிறது.

ஷா. ஐயோ ! அருகக கடவுளே ! அருகக கடவுளே ! இந்த ஹிந்துக்கள் தான் என்ன மனிதரோ ! இவர்கள ஒருவரை யொருவர் மோசம செயகிற வழக்கம, உலக மனைத்தையும அவவாறே சந்தேகிக்குமபடி கற்பிக்கிறதே.—ஐயா, இதை மாத்திரம எனக்குக் கொஞசம சொல்லுமபடி வேண்டுகிறேன. அவர் தவணைப்படி கொடாமல் தவறிபபோனுல, இநத அபராதத்தை வசூல் செயது, நான் அடையும பலன என்ன ? ஒரு ராத்தல் நர மாமிசம, மனுஷயனிடமிருநது எடுககபபட்டது, அவவளவு ஆடு மாடுகளின இறைச்சிககுச் சமானமாகுமா ? அவவளவு விலைதான் பெறுமா ? நான இநதச சினேகம பாராட்டுவது, அவருடைய நன் மதிபபைப பெறும பொருட்டே. அவா அதற குடன்பட்டால, சரி, இல்லாவிட்டால், உத்தரவளியும. நான வருகிறேன. நான விசுவாசம காட்டவந்ததற்காக, என்னை வைது அனுப்பாதீர்.

அ. சரிதான், ஷாம்லால் நானவ்விதமே பத்திரம எழுதித் தருகிறேன்.

ஷா. ஆனுல் உடனே புறப்பட்டு, கணக்கனிடம வந்து சந்தியும என்னை ; இந்தப் பரிஹாசப் பத்திரத்தை எழுதிவைக்கும

படி கட்டளை யிடும். நான் நேராகப் போயப் பணத்தைப் பைகளில் கட்டிக்கொண்டு, ஒரு செலவாளியான துஷ்டப் பையனிடம ஒப்பித்த என்வீட்டைப் பார்த்துவிட்டு, உடனே உங்களிடம வந்து சேர்கிறேன்.

அ. தயையுடைய மாறுபாடியே, போயவா சீக்கிரம.

[ஷாம்லால் போகிறுன்.]

இந்த ஜைனன சீக்கிரத்தில ஹிந்து வாவான்; இவ்வளவு தயைய பிறந்துவிட்டதே இவனிடம.

பா. வாக்கில நயமும மனத்திற கொடுமையும எனக்குத் திர்ப்தியாயிலலை.

அ. வா, வா . இதி லொன்றும பய மில்லை; என் கப்பல்கள் தவணைக்கு ஒரு மாதம முன்பாக வந்து சேரும்.

[போகிறுர்கள்.]

காட்சி முடிகிறது

---

# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி

**இடம்—மணிபுரம். சரோஜனியின் வீட்டிலோர் அறை. வாத்தியகோஷம்,**

**மார்த்தாண்டசேதுபதி தன் பரிவாரங்களுடன் வருகிறுன். நீலகேசி முதலிய பரிவாரங்கள் சூழ சரோஜனி வருகிறுள்.**

மா. ஆயிரங் கிரணங்களுடன் பிரகாசிக்கின்ற ஆதித்யன் அருகாமையில் உதித்து வளர்ந்தமையால் உண்டான எனது நிறத்தைக் குறித்து, நீ என்னை வெறுக்கவேண்டாம். பரிதியின் கிரணங்கள் பனிக்கட்டிகளையும உருக்கச்செய்யச் சக்தியில்லா திருக்கிற இமய மலைச் சாரலிற் பிறந்த அழகனை

வரவழை, உன்மீதுகொண்ட ஆசையின்பொருட்டு இருவரும் எங்கள் இரத்தத்தைக் குத்தி எடுக்கின்றோம், அவனது இரத்தமோ என்னுடைய இரத்தமோ, அதிகமாயச் சிவந்தது என்று நீயே பார். பெண்கள் நாயகமே, உனக் கொன்றுரைக்கிறேன் நான், எனது இவ் வடிவைக் கண்டு எப்படிப்பட்ட வீரர்களும் பயந்திருக்கின்றனர். உன் மீது எனக்குள்ள ஆசையின்மீ தாணைப்படி சொல்லுகின்றேன். எங்கள் தேசத்துச் சிறந்த கன்னிக மற்ற கன்னியாக ளெல்லாம் இதைக் கண்டு காதல் கொண்டிருக்கின்றனர். அன்றியும், பெண்ணரசே, உன் மனத்தைக் கவர வன்றி என் நிறத்தை மாற்றிக்கொள்ள நான் விரும்பேன்.

ச. புருஷனை வரிக்கும் விஷயத்தில், மற்ற கன்னிகைகள் தம் கண் நிறைந்த கணவனையே வரிப்பதுபோல, நான் வரிக்கும் படியானவ ளல்ல. அன்றியும், எனக் கேற்பட்டிருக்கிற சுல் கத்தின்படி, நானாக வரிக்கச் சுதந்தரமற்றவள். உமக்கு நான் தெரிவித்திருக்கிறபடி, அவர் ஏற்படுத்திய பிரகாரம் எந்தப் புருஷன் என்னை வெல்கின்றாரோ, அவருக்கே நான் மனைவியாகவேண்டுமென்று, என் தகப்பனார் தன் புத்தியின் யுக்தியால், என் சுதந்தரத்தைக் குறைத்து என்னைக் கட்டுப் படுத்தி யிராவிட்டால், அவனி புகழ் அரசே, இதுவரையில் என் காதலைப் பெற வந்தவர்களைவிட, நான் கண்ணுற்ற வரையில் தாம் ஒன்றும் குறைந்தபடி யன்று.

மா. அவ்வளவாவது கூறினதற்காக வந்தனம் செய்கிறேன். ஆகவே, என் அதிர்ஷ்டத்தைப் பார்க்கப் பெட்டிகளிடம் தயவு செய்து அழைத்துச் செல்லும்படி உன்னை வேண்டுகிறேன். இந்தக் கத்தியினால், சோபனைக் கொன்றிருக்கிறேன்; சுல்தான் சுலைமானிடமிருந்து மூன்று நாடுகளைச் ஜெயித்த பார்த்திப அரச குமாரன் சென்னியைச் சேதித்திருக்கிறேன். இதன்மீ தாணைப்படி சொல்கிறேன்—, உத்தமியே, உன்னைப் பெறவேண்டி, உலகிலுள்ள எப்படிப்

பட்ட கடூரமான கணைகளையுடைய உத்தம வீரனையும் என் கண் பார்வையினால் நடுநடுங்கச் செய்வேன்; எப்படிப் பட்ட சூராதி சூரனானாலும் அவனது தைரியத்தை அரை க்ஷணத்தில் நிலை குலையச் செய்வேன், பெட்டைக் கரடியி னின்றும் பாலருந்தும் அதன் குட்டிகளைப் பலாத்காரமாய்ப் பிரித்துவிடுவேன், இரை யகப்படாது கோபத்துடன் கர்ஜிக் கின்ற ஆண் சிங்கத்தின் எதிர் நின்று பரிஹசிப்பேன். ஆயி னும், என்ன துர்ப்பாக்கியம்! பீமசேனனும் பிருங்கி மஹ ரிஷியும் யார் பலசாலியென்று கண்டுபிடிக்கும்பொருட்டு பாய்ச்சிகை உருட்டினால், அதிர்ஷ்ட வசத்தால் அதிக பந்தயம் பலஹீனனான பிருங்கியின் கரத்தினின்றும் விழுந் தாலும் விழலாம். அம்மாதிரியே அர்ஜுனனானவன், அவ னது அற்பக் காலாள் ஒருவனால் தோற்கடிக்கப்படலாம். அம்மாதிரி குருட்டு அதிர்ஷ்டத்தால் இவ்விஷயத்தில் நான் தவறிப்போய், என்னை ஒருவன் ஜெயித்திட, நான் துயரத் தால் மடிய நேரிட்டாலும் நேரிடலாம்.

ச. உம்முடைய அதிர்ஷ்டத்தின்படி நடக்கவேண்டும். நீர் கோர முயல்வதை விடவாவது விடவேண்டும், அல்லது கோருவ தானால், அங்ஙனம் செய்யுமுன், ஒரு வேளை தவறாகக் கோரி னால், மறுபடியும் மண விஷயமாக மாதரின் முகத்தைப் பார்ப்பதில்லை என்று பிரமாணம் செய்யவேண்டும். ஆகவே, யோசித்துத் தீர்மானியும்.

மா. நான் யோசியேன் இனி. என் விதியிடம் என்னை அழைத் துச்செல்.

ச. முதலில் கோயிலுக்குப் போம், பிரமாணம் செய்திட, பிறகு போஜனம் கொண்டபின், உமது அதிர்ஷ்டத்தின்படி கோரலாம்.

மா. நற்சகுனம் வாய்க்குமாக! ஏனெனில், இந்நாலு மனிதர்களுக்குள் நான் அதிர்ஷ்டமுடையவனோ, அதிர்ஷ்டமற்றவனோ, என்பது நிர்மாணிக்கப்படும்.

[வாத்யகோஷம், எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி.

**இடம்—வாணீபுரம். ஒரு வீதி.**

**லாவண்ய கபீரன் வருகிறான்.**

*லா. என் எஜமானனாகிய இந்த யூதனைவிட்டு நான் ஓடிப்போக என் மனசு எனக்கு உதவி செய்யும். பிசாசு என் பக்கத்தில் நின்றுகொண்டு 'கபீரா, லாவண்ய கபீரா, நீ நல்லவன், ரொம்ப நல்லவன், காலை நீட்டு, கம்பி நீட்டு, நல்ல ஓட்டம், பிடி ஓட்டம்' என்று சொல்லி என்னை ஏவுகிறது. என் மனசோ, 'வேண்டாம், ஜாக்கிரதை. நீ நல்ல யோக்கியன். கபீரா, நீ ரொம்ப யோக்கியன், ஜாக்கிரதையாயிரு! ஓடிப் போகாதே! ஓட்டம் பிடிக்கிறது நல்லதல்ல,' என்று சொல்லுகிறது. தைரியசாலியான பிசாசு, 'ஓடிப்போ' என்கிறது. 'போய்விடு' என்கிறது பிசாசு, 'ஓடிப்போ ஓடிப்போ, நிற்காதே, மனதை தைரியம் பண்ணிக்கொண்டு ஓட்டம் பிடி' என்கிறது பிசாசு. என் மனசோ, என் கழுத்தைக் கட்டிக்கொண்டு, புத்திசாலித்தனமாய்ச் சொல்கிறது என்னிடம், 'அப்பா, கபீரா, நீ ரொம்ப யோக்யன், நல்ல யோக்யனுக்குப் பிறந்தவன், உம்—யோக்கியமான தாயாருக்கு' என்று சொல்லியிருக்க வேண்டும், ஏன் என்றால் என் தகப்பனார் ஒருமாதிரி, கொஞ்சம் உண்டு, அந்த விஷயத்தில் கொஞ்சம் ருசி.—என் மனசு சொல்லுகிறது; 'லாவண்யா, போகாதே' என்று பிசாசு சொல்லுகிறது 'போ'*

என்று. மனசு சொல்லுகிறது 'போகாதே' என்று. நான் மனசுக்குச் சொல்லுகிறேன், "நீ சொல்லுகிற புத்தி சரி தான்" என்று இந்தப் பிசாசுக்கும் "நீ சொல்லுகிற புத்தி சரி தான்" என்று சொல்லுகிறேன். என் மனசு சொல்லுகிற படி கேட்பதாயிருந்தால், என் எஜமானன் மாறுபாடியிடத்திலேயே காலம் கழிக்கவேண்டியதுதான். அவன் என்னமோ ஒருவித பிசாசு! இந்த எஜமானப் பிசாசு, பெரிய பிசாசு இருக்கிறதே—அப்படிச் சொல்லுகிறதற்காக நீங்கள் கோபித்துக் கொள்ளக்கூடாது—விட்டுவிட்டு, ஓடிப் போவது என்றால், சின்ன பிசாசு சொல்கிறபடி கேட்பதாகும். இந்த ஜைனன் என்னமோ சாட்சாத் பிசாசின் அவதாரம், ஆகவே, இந்த ஜைனனிடத்திலேயேயிரு என்று எனக்குப் புத்தி சொல்லுகிற என் மனசு இருக்கிறதே, ரொம்ப கடினமான மனசாயிருக்கவேண்டும். ஆகவே இந்தப் பிசாசு சொல்லுகிறதுதான் நல்ல புத்திமதி. ஆகவே பிசாசே, நான் ஓடிப்போகிறேன். உன் கட்டளைப்படி கம்பி காட்டு கிறேன், ஓட்டம் பிடிக்கிறேன்.

ஒரு கூடையை எடுத்துக்கொண்டு வயோதிக கபீரன் வருகிறான்.

வ. க. அப்பா! பிள்ளையாண்டானே! உன்னைத்தான் கேட்கிறேன். அந்த மாறுபாடி ஐயா வீட்டுக்கு வழி எப்படி?

லா. [ஒரு புறமாக] அடடா! இதோ என்னைப் பெற்றெடுத்த என் தகப்பனார், கண்கள் இரண்டும் தெரியாது நல்ல குருடாயிருப்பதனாலே, என்னை அறிந்துகொள்ளவில்லை. அவரோடு கொஞ்சம் வேடிக்கை பண்ணுகிறேன்.

வ. க. ஐயா! பிள்ளையாண்டான், உங்களைத்தான் கேட்கிறேன். அந்த மாறுபாடி ஐயா வீட்டிற்கு வழி எப்படி?

லா. நேராகப் போய் திரும்பும்போது உம்முடைய வலது கையின் பக்கம் திரும்பும்; அதற்கப்புறம் திரும்பும்பொழுது

இடது கை பக்கம் திரும்பவேணடும்; அதற் கப்புறம் திரும் பும்பொழுது, எந்தக் கையின் பக்கமும் திரும்பாது, மாறு பாடியின விட்டுக் தள மாறித் திரும்பும்.

வ. க. அப்பா ஆணை ! நீ சொல்கிற வழி கண்டுபிடிக்க என்னால் முடியாது அப்பா அவரிடத்திலே இருந்த லாவண்யன் என்ற பையன் இப்பொழுது அவரோடே இருக்கிறனு, இல்லையா ?—சொல்லக்கூடுமா உன்னால் ?

லா. யாரைப்பற்றி கேட்கிறீர்கள் ? வாலிபனான லாவண்ய துரை யைப்பற்றியா ? [ஒரு புறமாக] இதோ பார் ஒரு வேடிக்கை, வாயைக் கிளப்பிவிடுகிறேன் !—ஏனையா, அந்த வாலிபனான லாவண்ய துரையைப்பற்றியா கேட்கிறீர்கள் ?

வ. க. அவன் துரை யல்ல, ஐயா. ஒரு ஏழையினுடைய பிள்ளை. அவன் தகப்பன், நானே சொல்லிக்கொள்வதானலும், நிரம்ப ஏழை; ஏழையா யிருந்தாலும், நிரம்ப யோக்கியன், சாமி தயவினலே சாப்பாட்டுக்குக் குறைச்ச லில்லை.

லா. சரி, அவன் தகப்பன் எப்படிப்பட்டவனுகவாவது இருக்கட் டும். நாம் வாலிபனான லாவண்ய துரையைப்பற்றிப் பேசு வோம்.

வ. க. சுவாமி, அந்த லாவண்யன் தங்களுடைய சினேகிதனு ?

லா. உம்மைக் கேட்டுக்கொள்ளுகிறேன், ஆகையால், கிழவனரே, ஆகையால், உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்—இளைஞ னை லாவண்ய துரையைப்பற்றியா பேசுகிறீர் என்று.

வ. க. ஆம், லாவண்யனைப்பற்றிதான், தாங்கள் அடியேன்பேரில் தயவு செய்யவேணடும்.

லா. அப்படியானல் லாவண்ய துரை என்று சொல்லும். அப்பா! என்னை அந்த லாவண்ய துரையைப்பற்றி கேட்கவேண்டாம் பிள்ளையாண்டான கலா சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற படி, தலை விதியாலோ, கிரக சாரத்தாலோ, யமன் உத்தர

வாலோ மரித்துவிட்டான் உண்மையில் : அதாவது நீர் சொல்லுகிற சாதாரண வார்த்தையின்படி., மேல் உலகத்துக்குப் போய்விட்டான்.

வ. க. ஐ ஐயோ! தெய்வமே! அப்படி யில்லாதிருக்குமாக! அந்தப் பையன் என் கிழ வயதில் எனக்கு ஊன்றுகோலாச்சுதே—என்னைத் தாங்குவதற்கு!

லா. ஏனையா! என்னைப் பார்த்தால், என்ன உங்கள் கண்ணுக்குத் தடியைப்போ லிருக்கிறேனு, கட்டையைப்போ லிருக்கிறேனு, தூணைப்போ லிருக்கிறேனு?—ஐயா, என்னைத் தெரிகிறதா?

வ. க. ஐயோ! என்ன கஷ்ட காலம! ஐயா, பிள்ளையாண்டான், உமமை எனக்கு இன்னாரென்று தெரியவில்லை. ஐயா! உமமை வேண்டிக்கொள்கிறேன். என பையன்—சுவாமி அவனை ரட்சிப்பாராக!—இருக்கிறானு போய்விட்டானு? சொல்லும.

லா. அப்பா, என்னைத் தெரியவில்லையா உமக்கு?

வ. க. ஐயோ! இரணடு கண்ணும பொட்டையா யிருக்கிறேனே! எனக்குமமைத் தெரியவில்லையே!

லா. அது வாஸதவமதான். உமக்கு இரண்டு கண்ணும சரியா யிருந்தால் கூட என்னைக் கணடுபிடிக்கிறது உமக்குக் கஷ்டமாயிருக்கலாம. புத்திசாலியான தகப்பனுக்குத்தான் பிள்ளையின சூட்சுமம தெரியும. சரி! கிழவனரே, உஙகள் பிள்ளையின் சமாசாரம சொல்லுகிறேன். எனக்கு ஆசிர்வாதம செய்யுஙகள். [விழுந்தா ளிடுகிறான்.] எப்படியும உண்மை வெளியாகிவிடும், மூடி வைக்க முடியாது கொலையை நெடுஙகாலம. ஒருவனுடைய குமாரன் என்பதைமாத்திரம அப்படி மறைத்து வைக்கலாம் ; ஆயினும கடைசியில் உணமை வெளியாகிவிடும.

வ. க. ஐயா, நீஙகள எழுநதிருஙகள கொஞ்சம். நிச்சயமாய் என பையன் லாவண்யன் அல்ல நீஙகள், என்று கூறுவேன்.

லா. போனது போகட்டும், இனிமேல் இதைப்பற்றி விளையாட்டு வேண்டாம். எனக்கு உமது ஆசீர்வாதம் கொடுங்கள். நான்தான் லாவண்யன், உங்கள் பையனா யிருந்தவன், உங்கள் குமாரனா யிருக்கிறவன், உங்கள் குழந்தையா யிருக்கப் போகிறவன்.

வ. க. நீ தான் என் பிள்ளை என்று எண்ண முடியவில்லை.

லா. அதைப்பற்றி நான் என்ன நினைக்கவேண்டுமென்பதை அறியேன். நான்தான் லாவண்யன், மாறுபாடியின் வேலைக்காரன். ஆயினும் உங்கள் பெண்சாதி மரகதம்மாள்தான் என் தாயார் என்பதற்கு ஒன்னவோ சந்தேகமில்லை.

வ. க. ஆமாம், அவள் பேர் மரகதம்தான். நீ லாவண்யன் என்பது நிஜமானால், நீ என் சொந்த சதையும் இரத்தமும் என்று நான் சத்தியம் பண்ணுவேன். ஸ்வாமி உன்னைக் காப்பாற்றுவாராக! அப்பா உனக்கு எத்தனை பெரிய தாடி யிருக்குதடா! என் டப்பா குதிரைக்கும் வாலிலிருக்கும் மயிரைவிட, உன் முகத்தில் தாடி பெரிதாயிருக்கிறதே!

லா. ஆனால் உங்கள் டப்பா குதிரைக்கு மயிர் குறுகிப்போயிருக்கவேண்டும். நான் கடைசியில் பார்த்தபொழுது, என் முகத்திலே இப்பொழுது இருக்கிறதைவிட வாலில் மயிர் அதிகமா யிருந்தது.

வ. க. அப்பா, இதென்ன எவ்வளவு மாறிப்போனாய்! உன் எஜமானும் நீயும் எப்படி ஒத்து இருக்கிறீர்கள்? அவருக்குக் காணிக்கையாக இதைக் கொண்டுவந்திருக்கிறேன். இப்பொழுது, எப்படி ஒத்திருக்கிறீர்கள்?

லா. அப்படி இருக்கிறோம், ஒரு மாதிரியாக ஆனாலும், நான் என்னமோ அவரை விட்டு விட்டு ஓடிப்போகத் தீர்மானித்து விட்டேன்; ஆகவே அவரை விட்டு ஓடிப்போகிற வரையில் என் மனசு சும்மா இருக்காது. என் எஜமான் என்னமோ கேடு கெட்ட மாறுபாடி, அவனுக்குப் போய் காணிக்கை

கொடுப்பதாவது! அதைவிட ஒரு கயிறு கொடுங்கள், தூக்குப் போட்டுக்கொள்ள! செத்துப் பிழைக்கிறேன் நான், அவனிடம் வேலைசெய்து. என் கையில் விரல் எத்தனை என்று என் விலா எலும்பினால் எண்ணிப் பார்த்துச் சொல்லலாம். அப்பா! அந்தமட்டும் நீங்கள் சரியான வேளைக்கு வந்தீர்கள்! நல்ல சந்தோஷம், உங்கள் கையில் கொண்டுவந்ததை பானுசேனர் என்று ஒரு நல்ல பிரபு இருக்கிறார், அவருக்குக் கொடுங்கள். அவ ரென்னமோ நல்ல எஜமான், வேலைக்காரர்களுக்கெல்லாம் நல்ல புதிதான விலை யுயர்ந்த உடுப்புகள் கொடுக்கிறார். அவரிடத்தில் நான் போய் வேலையில் அமராவிட்டால், நான் இந்த உலகத்தையே விட்டு ஓடிப்போய்விடுவேன்.—அடடா! என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! இதோ வருகிறார் அவர்! அவரிடம் போம். இனிமேல் ஒரு க்ஷணமும் நான் அந்த மாறுபாடியிடம் வேலை செய்வேனாயின், நானும் ஒரு மாறுபாடிதான்.

கேசரிநாதன் முதலிய வேலையாட்களுடன் பானுசேனன் வருகிறான்.

பா. அப்படியே செய்யலாம் நீ, ஆனால் துரிதப்படுத்தி எப்படியாவது ஐந்து மணிக்குள்ளாக போஜனம் சித்தமா யிருக்கும்படி செய். இந்த நிருபங்களை யெல்லாம் கொடுத்து விடும்படிச் செய். வேலையாட்களுடைய உடுப்புக ளெல்லாம் சித்தமாகட்டும். கிரிஜாநாதரை சீக்கிரம் என் வீட்டிற்கு வரும்படி சொல், போ.

[ஒரு வேலையாள் போகிறான்.]

லா. அப்பா, போம் அவரிடம்.

வ. க. ஐயா, அடியேன் நமஸ்காரம்.

பா. வந்தனம். என்ன விசேஷம்? என்னுடன் ஏதாவது பேச வேண்டுமோ?

வ. க. இதோ இருக்கிறானே என் பையன், ஐயா, ஏழைப் பையன்.

லா. ஏழைப பையனல்ல, ஐயா! பணக்கார மாறுபாடியின வேலைக்காரன, என் இஷ்டம இப்பொழுது—என் தகப்பனூர் சொல்லுகிற பிரகாரம்—

வ. க. அவனுக்கென்னமோ வேலை செய்யவேணும் என்று நிரம்ப விசகம. அதாவது ' உலகத்தில சொலலுகிறார்களே—நிரமப—

லா. நான சுருக்கிச் சொல்லுகிறேன, இபபொழுது, நான மாறுபாடியிடம இருக்கிறேன, அவரை விட்டுவிட்டு, என தகப்பனூர் சொல்கிற பிரகாரம—

வ. க. அவன எஜமானனுக்கும அவனுக்கும—நீஙகள கோபித்துக் கொளளக்கூடாது—அவவளவாக வருத்தம இலலை—

லா. நான சீக்கிரம சொல்லிவிடுகிறேன! வாஸதவத்திலே இநத மாறுபாடி எனனைக் கஷடபபடுத்துகிறான. ஆகவே, என தகபபனூா, வயசானவா, அவா் உஙகளுககுத் தெரிவிக்கிற பிரகாரம—

வ. க. இதோ கொஞசம புருக் கறி கொண்டுவந இருககிறேன். அதை உஙகளுக்குக காணிக்கையாகச் சமாபபிக்க விருமபுகிறேன—நான கேட்டுக்கொளவது என்ன வென்றால்—

லா. நான் விரைவிற் சொல்லிவிடுகிறேன். நாஙகள கேட்கவந்த சமாசாரம எனனைப் பறறிகொண்டது. அதைப்பற்றி இந்த யோககியமான பெரியவா தஙகள சமுகத்துக்குத் தெரிவிக்கிறா; அதைபபறறி நானே சொல்வதாயிருந்தாலும, இவர் கிழவனு யிருநதபோதிலும, எளியவர்—என் தகப்பனூர்—

பா. இரண்டு பெயருக்காக யாராவது ஒருவன பேசட்டும. என்ன வேண்டும உனக்கு?

லா. தங்களிடத்தில் வேலைக்காரனுக இருக்கவேண்டும, ஐயா!

வ. க. அதுதான் நான் சொல்லவந்த சமாசாரத்துக்கு அர்த்தம.

பா. உன்னை எனககுத் தெரியும நன்ருய். நீ வேண்டியதை உனக்கு அளித்தேன். ஷாமலா லாகிய உன் எஜமான், இன்

றைத்தினம் என்னுடன் பேசியபொழுது உன்னைப்பற்றி சிபாரிசு செய்திருக்கிறார். பணக்கார மாறுபாடியிடம் வேலை செய்வதை விட்டு, எளியவனான என்னிடம் வேலை செய்ய உனக்கு விருப்பமானால், அப்படியே செய்.

லா. 'பணமும் குணமும் ஒரு நிலை நில்லா' என்று ஒரு பழமொழியுண்டு. அதன்படி, என் எஜமானான ஷாமலா விடத்தும் உம்மிடத்தும் அது பகிரப்பட்டிருக்கிறது. சரியாக உம்மிடம் அந்தக் குணம் இருக்கிறது, அவரிடம் அந்தப் பணமிருக்கிறது.

பா. அதை நன்றுயுரைத்தாய்.—ஐயா, பெரியவரே, உமதுடைய பிள்ளையோடு போய் அவனுடைய பழைய எஜமானனுடைய உத்தரவைப் பெற்று, என் வீட்டை விசாரித்துக்கொண்டு வந்து சேரும். [தன் வேலையாட்களுக்கு] மற்றவர்களுடைய உடையைப்பார்க்கிலும் சிறந்ததான உடுப்பை இவனுக்குக் கொடுங்கள் : உடனே செய்ததாக வேண்டும்.

லா. அப்பா, இப்படி வாரும், எனக்கு வேலையே அகப்படாது, வாயில்லை, ஆகவே பிழைப்பது கஷ்டம் என்றீர்களே பார்த்தீர்களா இப்பொழுது! [தன் உள்ளங் கையைப் பார்த்து] என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! இதோ பாருங்கள் என் உள்ளங் கையை; இதைப்பார்க்கிலும் அதிர்ஷ்டமான கை வாணிபுர மெல்லாம் சுற்றினாலும் அகப்படாது என்று ராமாயணத்தின்மீது பிரமாணம் செய்வேன் நான். இதோ பாருங்கள்! ஆயுள் ரேகை எவ்வளவு தூரம் போகிறது. இதோ பெண்சாதிகளின் கணக்கு, ஐயோ! பதினைந்து பெயர்தானா, அதிகமில்லை! பதினொரு கைம்பெண்கள், ஒன்பது கன்னிகள், போதாதா ஒரு மனுஷனுக்கு? பிறகு மூன்று நீர் கண்டம் தப்பவேண்டும். படுக்கை மெத்தையின் ஓரத்தினாலும் பிராண அபாயம் ஒன்று, இவைகளை யெல்லாம் இலேசாகத் தப்பித்துக்கொள்ளலாம். லட்சுமி என்னமோ, பெண் பிள்ளையா யிருந்தபோதிலும், நல்ல அம்மாள்தான், இவைகளை யெல்லாம் எனக்குக் கொடுத்

தாக்களே. அப்பா, போகலாம் வாரும். கண்ணை மூடித் திறப்பதற்குள்ளாக, மாறுபாடியிடம் சொல்லிவிட்டு வந்து விடுகிறேன்.

[லாவண்ய கபீரனும், வயோதிக கபீரனும் போகிறார்கள்.]

பா. கேசரிநாதா, நான் கூறியதெல்லாம் கவனத்திலிருக்கட்டும். இவைகளையெல்லாம் வாங்கிச் சரியாக ஏற்பாடு செய்த பின், சீக்கிரம் வந்துசேர். நான் எனது ஆப்தரான சிநேகிதர்களுக்கு விருந்திடுகிறேன் இன்றிரவு. நீ போ சீக்கிரம்.

கே. இவ்விஷயத்தில் என்னாலியன்ற அளவு முயல்கிறேன்.

**கிரிஜாநாதன் வருகிறான்.**

கி. எங்கே உன் எஜமான்?

கே. அதோ போகிறார், ஐயா. [போகிறான்

கி. ஐயா, பானுசேனரே!

பா. கிரிஜாநாதா!

கி. நான் உம்மை ஒன்று கேட்கவேண்டும்.

பா. அதை நீ பெற்றுக்கொண்டாய்.

கி. நீர் என்னைத் தடுக்கக்கூடாது—நானும் உம்முடன் மணிபுரத்திற்குப் போகவேண்டும்.

பா. ஆயின், நீ போகத்தான் வேண்டும்—ஆகவே ஒரு வார்த்தை. நான் சொல்வதைக் கேள், கிரிஜாநாதா, உன்னிடம் அடக்கமென்பதில்லை, முரட்டுத்தனமிருக்கிறது. உரத்த சத்தத்தோடு பேசுகின்றாய். இவைகளெல்லாம் உன் குணத்திற்கு ஒத்தவைகளாகத்தானிருக்கின்றன; என்னைப் போன்றவர்களுடைய கண்களுக்கு இவைகள் குற்றமாகத் தோற்றவில்லை. ஆயினும், உன்னை நன்று யறியாதவர்களுக்கு, அவைகள் தீய குணங்களாகக் காணப்படும். ஆகையால், உன் விளையாட்டுப் புத்தியை, அடக்க ஒழுக்கத்தினால், கொஞ்சம் கஷ்டப்பட்டாவது, சாந்தப்படுத்திக்கொள்ளும்படி வேண்டுகிறேன். உன்னை இல்லா

## மூன்றாம் காட்சி

**இடம்—வாணிபுரம், ஷாம்லால் வீட்டில் ஓர் அறை.**
**ஜலஜாவும், லாவண்யனும் வருகிறார்கள்.**

நீ இவ்விதம் என் தகப்பனாரை விட்டுப் போகின்றாயே என்று வருத்தமா யிருக்கிறது. எங்கள் வீடு நரகந்தான், ஆயினும் அந்த நரகத்தில் உன் சேர்க்கை விசேஷத்தினால், கொஞ்சம் கவலை நீங்கிச் சுகமா யிருந்தேன். நல்ல மனமாய் போய்வா — இதோ உனக்குக் கொடுப்பன். லாவண்யா, பானுசேன ராஜ்ய ன புதிய அழகான வாலிபன் விருந்துண்ண வருகிறார். லோதாரவனை நீ காண்பாய். இந் நிருபத்தை அவரிடம் கொடு, இரகசியமாய் இதைச் செய். போய்வா, உன்னோடு நான் பேசிக்கொண் டிருப்பதை என் தந்தை காண்பது எனக்கிஷ்ட மில்லை.

லா. நான் போய்வருகிறேன் அம்மணி. நான் வாயால் சொல்ல வேண்டியதை என் கண்ணீரானது தெரிவிக்கின்றது. என் அழகிய அம்மணி, என் இனிய தாயே, எப்படியாவது ஒரு வீரன் வந்து உம்மைத் திருடிக்கொண்டுபோய் மணம் செய்து கொள்ளாவிட்டால் நான் மோசம்போனவனாவேன். நான் வருகிறேன் அம்மணி. இந்த மடத்தனமான கண்ணீரானது என் ஆண்மைக்குரிய தைரியத்தை அழிப்பச் செய்கிறது, நான் வருகிறேன் அம்மா. [போகிறான்.]

ஜ. போய்வா, லாவண்யா,—ஐயோ! என் தகப்பனாருடைய பெண்ணென்று வெளியிற் சொல்லவும் நான் வெட்கப் படும்படி என்ன பாப மிழைத்தேன் நான்! அம்மட்டும் பிறப்பில் அவருக்குப் பெண்ணாகியும், குணத்தில் அவருக்குப் பெண்ணாகா மிருக்கின்றேனே!—லோதாரே, நீர் கூறிய மொழியினின்றும் தவறு திருப்பீராகில், கடிதினில் நான் இக் கஷ்டமெல்லாம் நீக்கி, உமதிஷ்டப்படியே ஹிந்துவாகி, உமது இனிய மனைவியுமாவேன். [போகிறாள்.]

**காட்சி முடிகிறது.**

## நான்காம் காட்சி.

### இடம்—வாணீபுரம், ஓர் வீதி.

**கிரிஜாநாதன், லீலாதரன், சாம்பநாதன், சோமசேனன் வருகிறார்கள்**

லீ. அப்படியல்ல, இராத்திரி விருந்தின் மத்தியில் நாம் ஒருவரு மறியாதபடி வெளி வந்து, எனது வீட்டில் நமது உருவை மாற்றி, ஒரு மணி நேரத்திற்குள்ளாகத் திரும்பி வந்துசேர லாம்.

கி. அதற்குத் தக்க ஏற்பாடுகளெல்லாம் நாம் செய்யவில்லையே.

சா. நமக்கு வேண்டிய தீவர்த்தி ஆட்களுக்கு நாம், இன்னும் ஏற்பாடு செய்யவில்லையே.

சோ. எல்லாம் தக்கபடி ஏற்பாடு செய்யாவிட்டால் அசங்கியமாய் முடியும், அதைவிட இதில் கையிட்டுக்கொள்ளாதிருத்தலே மேலாம் என்று எனக்குத் தோற்றுகிறது.

லீ. இப்பொழுது நாலு மணிதான் ஆயது; இன்னும் இரண்டுமணி சாவகாச மிருக்கிறது நமக்கு வேண்டியவை களைச் சித்தம் செய்துகொள்ள—

**ஒரு நிருபத்துடன் லாவண்யன் வருகிறான்**

நேயா, லாவண்யா, என்ன விசேஷம்?

லா. தயவு செய்து இதை நீர் பிரித்துப் பார்ப்பீராயின், விசேஷ வர்த்தமானத்தை அது தெரிவிக்கும்.

லீ. இந்தக் கையெழுத்து எனக்குத் தெரியும். உண்மையில் இது அழகுடைய கையெழுத்தே; எழுதப்பட்ட காகிதத் தைவிட இதை எழுதிய அழகிய கை அதிக வெண்மை யானது.

கி. ஆயின் உண்மையில் காதற் கடிதம்.

லா. ஐயா, எனக்கு உத்தரவு கொடுக்கவேண்டும்.

லீ. எங்கே போகிறாய் நீ இப்பொழுது?

லா. உண்மையில், என் பழைய எஜமானனாகிய ஜைனனை, என் புதிய எஜமானனாகிய ஹிந்துவுடன் விருந்துண்ணும்படி அழைப்பதற்காக.

லீ. பொறு கொஞ்சம்; இதைப் பெற்றுக்கொள்.—என் இனிய ஜலஜாவுடன் நான் தவறமாட்டேன் என்று கூறு—அதை இரகசியமாய்ச் சொல், போ. [லாவண்யன் போகிறான்.] ஐயா, இன்றிரவின் வேஷத்திற்கு எல்லாரும் சித்தமாகினீர்களா இல்லையா? என் தீவர்த்தியால் ஏற்பாடு செய்தாயது.

சா. சரி யாரலை, நான் உடுத்தியிற போகவேண்டும் அதற்காக.

சோ. நானும் அப்படியே.

லீ. ஒரு மணி பொறுத்து, கிரிஜாநாதனையும், என்னையும், கிரிஜாநாதன் வீட்டருகிற சந்தியும்.

சா. நாம் அங்ஙனம் செய்வது நலமே,

[சாம்பநாதனும், சோமசேனனும் போகிறார்கள்.]

கி. அழகிய ஜலஜாவிடமிருந்து வந்த தல்லவா அக்கடிதம்?

லீ. உன்னிடம் நான் எல்லாவற்றையும் உரைத்திடவேண்டும். தன்னைத் தன் பிதாவின் வீட்டிலிருந்து எப்படி நான் கொண்டு போகலாமென்றும், தான் எவ்வளவு பொன் நகைகள் எடுத்து வைத்திருக்கிறாள் என்றும், தனக்காக எம்மாதிரியான ஆண் உடை சித்தம் செய்துவைத்திருக்கிறாள் என்றும், எல்லாம் தெரிவித்திருக்கிறாள். அவள் தந்தை எப்பொழுதாவது மோட்சம் எய்துவதானால், தன் பெண்ணாகிய இவள் செய்யும் புண்ணியத்தின் பலனாகும் அது. சனி எப்பொழுதாவது அவள் பாதத்தைப் பிடிப்பதானால், இந்த நாஸ்திகனான ஜைனன் மகளா யுதித்த

போக்கைக் கொண்டு தான் அவனைப் பிடிக்கவேண்டும். வா, போவோம் நாம்; போகும் பொழுது இதைப் படித்துப் பார். அழகிய ஜலஜாவே உனதிவிரத்தி ஆளாகப் போகிறாள்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது

---

இடம்—வாணிபுரம். ஷாம்லால் வீட்டிற் கெதிரில்

ஷாம்லாலும், லாவண்யனும் வருகிறார்கள்

ஷா. சரி! நீயே பார்க்கப்போகிறாய். உன் கண்களே உனக்குத் தெரிவிக்கும், கிழவனான ஷாம்லாலுக்கும், பானுசேனனுக்கும் உள்ள பேதம்.—யார் உள்ளே? ஜலஜா!—என்னிடம் இன்று கொழுத்ததுபோல் அங்கே முடியாது.—யார் அது ஜலஜா!—இங்கே குறட்டை விட்டுத் தூங்கிக் காலம் கழிப்பாயே, உடுப்புகளை யெல்லாம் கிழிப்பாயே, அந்த மாதிரி முடியாது அங்கே.—யார் அங்கே? ஜலஜா! நான் கூப்பிடுகிறேன்!

லா. அம்மா, ஜலஜா!

ஷா. உன்னை யாரடா கூப்பிடச் சொன்னது! உன்னைக் கூப்பிடச் சொல்லவில்லையே நான்.

லா. உத்தரவு கொடுத்தா லொழிய நானொன்றும் செய்யலாகா தென்று பன்முறை சொல்லியிருக்கிறீர்கள் தாங்கள் எனக்கு.

ஜலஜா வருகிறாள்.

ஜ. அழைத்தீர்களா? என்னவேண்டும் உங்களுக்கு?

ஷா. ஜலஜா, என்னை விருந்துக் கழைத்திருக்கிறார்கள். இதோ என் சாவிகள்.—ஆயினும், நான் ஏன் போகவேண்டும்? பிரீதியினால் நான் அழைக்கப்படவில்லை—என் தூ[illegible]க்கார

எனக்கிவ்வாறு முகஸ்துதி செய்கிறார்கள். ஆயினும் நான ஷாத்திரத்திற்காகப் போகிறேன், அவனுடைய விருந்தைப புசித்து அச் செலவாளியின் செல்வத்தைக் கரைபபதற காக! பெண்ணே ஜெஸிகா, என் வீட்டை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்.—போகிறதற கெனனமோ எனக்கிஷ்டமே யில்லை. நேற்றிரவு பணப்பைகளைபபற்றி நான கனவு கண டேன், ஆகவே, என அமைதியைக் கெடுக்க ஏதோ விபரீ தம நேரிடப போகின்றது என்று அஞசுகிறேன நான.

லா. ஐயா, புறபபடுமபடி தஙகளை நான கேட்டுககொள்ளுகி றேன். என் புதிய எஜமானன உஙகள் 'வரவை' எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

ஷா. நானு மபபடியே அவருடையதை எதிரபாரக்கிறேன்.

லா. அவர்களெல்லாம் ஒன்று கூடி யோசனை செய்திருக்கிறார் கள்.—நீங்கள ஒரு வேஷத்தைப பார்பபீர் என்று சொல்ல மாட்டேன். ஆயினும் அப்படிப பார்பபீர்களாயின் நான்கு வருஷத்திற்கு முன், பொங்கல் பண்டிகை, திங்கட்கிழமை கருநாளில் வந்தபொழுது, காலை ஆறு மணிக்கு என் மூக்கு இனவு எடுத்த சகுனம, சரியாய முடிந்தது என்று சொல் வேன்.

ஷா. என்ன! வேஷம போடபபோகிறாகளோ?—ஜெஸிகா, நான சொல்வதைக் கேள். என வீட்டுக கதவுகளை யெல்லாம சாத்தி வை. மேள சத்தமாவது, இந்த குழைவுகுழைவு என்று காதுக்கு வெறுபபாயக் கூவுகிற குழலோசையாவது கேட்டால், மேல்மாடிக்கு ஓடிபபோய பலகணி வழியாயத் தலையை நீட்டிக்கொணடு, வீதியிற பாரக்காதே, முகத்தில வர்ணத்தைப் பூசிக்கொண்டு வருகிற இந்த அறிந்து முட டாள்களைக் காணபதறகாக. என் வீட்டின கதவுகளை மூடி வை, அதாவது நான சொல்வதென்ன வென்றால், என் வீட்டு ஜன்னல்களை நனறாகச் சாத்தி வை. மூடாகளபோடும அர்த்த மில்லாக் கூச்சல் என் யோககியமான வீட்டிறகுள

நுழையவே வேணடாம. திகமபர பாதத் தாணை ! இன்றிரவு எனக்கு வெளியே போய விருந்துண்ண இச்சையேயில்லையென்று சத்தியம செயகின்றேன்.—ஆயினும போய்த் தொலைக்கவேணடும.—போடா அபபா, போ முன்னே. நான் வருகிறேன் என்று சொல், போ.—

லா. இதோ முன்னே போகிறேன் ஐயா.—அமமணி, எதற்கும் பலகணி வழியாயப பாரும வெளியே.

" இந்த வழியோ ரிநதுவே வருவான
ஜெயினன மகளிரு நயனங கவர்வான்."

[போகிறான்.]

ஷை. அந்த வாலியின வமசத்து மடையன் என்ன சொன்னான்?

ஜ. "அமமணி, நான போய்வருகிறேன்" என்று சொல்லிப் போனான, வேறொன்றுமில்லை.

ஷை. முட்டாள பையன், நல்லவன்தான்; ஆனால் பெருந்திண்டிக் காரன். லாபம சமபாதிப்பதில் நத்தைதான். பகற்பொழுதெல்லாம உறஙகுகின்றான காட்டுப பூனையைப்போல். சோம்பேறிகள என வீட்டில் வாழ முடியாதென்னுடன. ஆகவே அவனை அனுப்பிவிடவேணடிய தாயிற்று. அனுப்புவதிலும, தான் என்னிடமிருந்து கடன வாங்கிய பொருளை அவன் செலவழிப்பதில், இவன் அவனுக்கு உதவி செய்யும்படி சரியானவனிடந்தான அனுப்புகிறேன. — சரி, ஜெஸிகா, நீ போ உள்ளே. நான உடனே திரும்பி வந்தாலும வந்துவிடுவேன ஒருவேளை, நான சொன்னபடி செய். உன் பின்னால கதவை சாத்திக்கொள. — " கட்டியாயக் கட்டினால், திட்டமாயக் காணலாம." இப்பழமொழி சிக்கனமாம மனத்திறகு எப்பொழுதும அர்த்த முடைய தாகும. [போகிறான.]

ஜ. போயவாரும; என அதிர்ஷ்டம கெடாதிருந்தால், சீக்கிரத்தில எனக் கொரு தந்தை நஷ்டம, உமக்கொரு பெண நஷ்டம.

[போகிறாள்.]

காட்சி முடிகிறது.

## ஆரும் காட்சி

**இடம்:—வாணிபுரம், ஷாம்லால் வீட்டிற்கு எதிர்.**
**கிரிஜாநாதனும், சாம்பநாதனும் வேஷம் பூண்டு வருகிறார்கள்.**

கி. இக் கொட்டிலின் கீழ்தான் நின்றுகொண் டிருக்கும்படி லீலாதரர் விரும்பினார்.

சா. அவர் குறித்த காலமாய்விட்டதே சற்றேறக் குறைய.

கி. அவர் குறித்த மணிப் பிரகாரம் வாராதது பெருத்த ஆச்சரியமாகும். ஏனெனில் காதலர்கள் குறித்த மணிக்கு முன்னதாக ஓடி வருவார்கள் என்றும்.

சா. நண்பர்களுக்குக் குறைத்த மொழியினைக் காத்திட நாடும் வேகத்தினும், புதிய காதலின் தளைகளைப் பூட்டுதற்குப் பதின்மடங்கு வேகமாய்ப் பறந்து செல்லும், மதனன் கிளிகள்.

கி. எக்காலத்தும் அப்படித்தான் அது. விருந்திற்கு உட்காருமுன் இருக்கும் பசியின் விருப்பத்துடன், எவனொருவன் அதினின்றும் எழுகிறான்? முதலிற் சென்ற வேகத்தின் தீவிரத்துடன், அதே வழியில் திரும்பும் காலை, கால் தளராது கடந்து செல்லும் குதிரை எங்குளது? உலகத்தில் உள்ள எல்லா விஷயங்களிலும், அவைகளை நாடும்பொழுதிருக்கும் உற்சாகம், அவைகளை அனுபவிக்கும்பொழுது கிடையாது. துறைமுகத்தினின்றும் புறப்படும்பொழுது நாவாயானது, மதம் பிடித்த காளையைப்போல் அழகுறச் சீலைகளைத் தரித்து, வேசிபோன்ற காற்றினால் அணைத்து ஆதரிக்கப்பட்டு, என்ன ஆடம்பரத்துடன் போகிறது! திரும்பும் காலையோ, அதே வேசையாம் காற்றினால் பக்கங்களெல்லாம் ஒடிந்து, வெயிலிலும் மழையிலும் அடிபட்டு, பாய்மரங்களெல்லாம் முறிந்து பாழாக்கப்பட்டு, தளர்ந்து மெலிந்த தரித்திரனைப் போல் வந்து சேர்கிறது.

சா. இதோ வருகிறான் லீலாதரன்.—அதைப்பற்றி அப்புறம் பேசுவோம்.

**லீலாதரன் வருகிறான்.**

லீ. என் இனிய நண்பர்களே, உங்களை நெடுநேரம் காக்கச் செய்ததற்காக உங்கள் மன்னிப்பைக் கேட்கிறேன். நானல்ல உங்களுக்கு இவ்வளவு கஷ்டம் கொடுத்தபடியன்று, என் வேலையே இவ்வாறு தாமதிக்கச் செய்தது. உங்கள் காதலிகளைப் பெற நீங்கள் கள்ள வேடம் பூணச் சமயம் வாய்க்குங்கால், உங்களுக்காக, நீர் காத்தபடி, அப்பொழுது நானும் காக்கின்றேன். வாருங்கள், அதுதான் என் ஜைன மாமனார் வீடு.—ஓய்! யார் உள்ளே?

**ஆண் உடையுடன் ஜலஜா மேல்மாடியில் தோற்றுகிறாள்.**

ஜ. யார் நீர்? உங்களுடைய குரல் எனக்குத் தெரிந்ததாக நான் சத்தியம் செய்யக் கூடுமாயினும், சந்தேகமில்லாதிருக்கும் பொருட்டு உங்கள் பெயரைச் சொல்லுங்கள்.

லீ. நான் லீலாதரன்—உன் காதலன்.

ஜ. லீலாதரர்தான்! சந்தேகமில்லை, என் காதலர்தான். இத்தனை காதல் உம்மைத்தவிர யார்மீது வைத்துள்ளேன்? உம்மையன்றி, நான் உமது காதலியென்று, யாருக்குத் தெரியுமிப்பொழுது?

லீ. நீ என் காதலி என்பதற்கு, உலகாளும் ஈசனும், உன் மனமுமே சாட்சி.

ஜ. இதோ இந்தப் பெட்டியைப் பிடித்துக்கொள்ளும். கஷ்டத்திற்குத் தகுந்த கூலியாகும் அது. இருட்டாயிருப்பது எனக்குச் சந்தோஷம், உமக்கு என்னைத் தெரியாமலிருக்கின்றது. ஏனெனில் இந்தவேஷத்தைத் தரித்தது எனக்கு வெட்கத்தைத் தருகிறது. ஆயினும் காமத்துக்கு கண்ணில்லை அல்லவா? காமுகர்கள் செய்யும் அழகிய குற்றங்

களெல்லாம் அவர்கள் கண்ணுக்கே தெரியா தல்லவா? அப்படித் தெரிவதானால், இவ்வளவுக்கும் காரணமாயிருந்த அந்த மன்மதனே நானிவ்வாறு ஆண் வேடம் தரித்திருப்பதைக் கண்டால் நாணப்படுவான்.

லொ. இறங்கி வா, நீ என் தீபக்காரனா யிருக்கவேண்டும்.

ஜெ. என்ன? என் வெட்கம் வெளிப்படை யாகும்படி நானே வெளிச்சம் பிடிக்கவேண்டுமா? முன்பே உண்மையில் வெளிப்படையா யிருக்கிறது, அதற்கு கொண்டு வெளிச்சமும் வேண்டுமோ? காதலா, இதென்ன நியாயம்? இது என்னை வெளிப்படுத்தும் வேலை யாகுமே. நான் ஒருவரு மறியாதபடி மறைந்து தல்லவோ செல்லவேண்டும்?

லொ. கண்ணே, இந்த அழகிய ஆண் உடையே உன் ரூபத்தை நன்றாய் மாற்றுகின்றது. சீக்கிரம் வா. இராக்காலம் விரைவிற் கரந்தோடுகின்றது. பாஸேனா வீட்டில் விருந்தினரெல்லாம் நமது வரவை எதிர் பார்த்திருக்கின்றனர்.

ஜெ. கதவுகளை யெல்லாம் சரியாகத் தாளிட்டுக்கொண்டு, என்னோடு இன்னும் கொஞ்சம் பணப்பைகளையும் எடுத்துக் கொண்டு, சீக்கிரம் வந்துசேர்கிறேன் உம்மிடம்.

[மேல்மாடியிலிருந்து மறைகிருள்.]

கி. ஓ! பிறப்பில் இவள் ஜைன மதஸ்தளா யிருந்தாலும், குணத்தில் ஹிந்துவே.

லொ. அதன்பொருட்டே அவள்மீது நான் அடங்காக் காதல் கொண்டிருக்கிறேன். குணத்தை யறியும் சக்தி எனக் கிருக் குமாயின், அவள் குணவதியே. என் கண்கள் ஆற காண்பது மெய்யானால், அவள் அழகியே. அவள் நிரூபித்த ருசுவின் படி நிஜவதியே. ஆகவே, மாறுத என் மனத்தினில், அழகும் குணமும் கற்பும் உடையவளாய் மதிக்கப்படுவாள் என்று மவள்.

ஜலஜா பின்னே வருகிறாள்.

ஸ். என்ன வந்தீரையா ?—புறப்படுங்கள் ! நண்பர்களே, புறப்படுங்கள் சீக்கிரம், வேஷம் பூண்ட நமது நண்பர்கள் நமக்காகக் காத்துக்கொண் டிருப்பார்கள் இந்நேரம்.

[ஜலஜாவுடனும் சாம்பநாதனுடனும் போகிறான்.]

அநந்தநாதன் வருகிறான்.

அ. யார் அங்கே ?

ஸ. அநந்தநாதரே !

அ. சீ சீ ! கிரிஜாநாதா. எங்கே மற்றவர்களெல்லாம் ? ஒன்பது மணியாய் விட்டது. நமது சிநேகிதர்களெல்லாம் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள், இன்றைக்குக் கூத்தாட்டம் எல்லாம் ஒன்றும் உதவாது. காற்று திரும்பி விட்டது. பானுசேனன் உடனே கப்பலேறுகிறான். உங்களைத் தேடிக் கண்டுபிடிக்க இருபது பெயரை அனுப்பினேன்.

கி. மிகவும் சந்தோஷம். உடனே இன்றிரவே புறப்பட்டு கப்பலேறிச் செல்வதைவிட உத்தமமான சந்தோஷம் வேறொன்றையும் விரும்பவில்லை நான்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது

---

## ஏழாம் காட்சி

*இடம். மணிபுரம் சரோஜினியின் வீட்டிலோர் அறை*
*எக்காளம்.*

**சரோஜினியும் மார்த்தாண்ட சேதுபதியும் தங்கள் பரிவாரங்கள் சூழ வருகின்றனர்.**

ச. போய்த் திரைகளைத் தள்ளி, பெட்டிகளைக் காட்டுங்கள், இந்த உத்தம மன்னருக்கு.—இனி உமது இஷ்டமானதைத் தொடும்.

மா. முதற் பெட்டி.—பொன்னாலானது. இதன்மீது "என்னை விரும்புவோன் பலர் விரும்புவதைப் பெறுவான்" என்று எழுதி யிருக்கிறது. இரண்டாவது—வெள்ளி. "என்னை விரும்புவோன் தன் யோக்கியதைக்குத் தக்கபடி பெறுவான்" என்று உறுதி கூறுகிறது. இந்த மூன்றாவது பெட்டி, ஒளியிலா ஈயத்தா லாயது, "என்னை விரும்புவோன் தனக்குற்றதை யெல்லாம் அளிக்கவும், அழிக்கவும் துணிய வேண்டும்," என்று, மட்டி ஈயத்திற்குத் தகுந்த மட்டி புத்திதான் கூறுகிறது. இவற்றுள் சரியானதைத் தொடுகின்றேனோ இல்லையோ, என்பது எனக்கு என்ன வாய்த் தெரிகிறது?

ச. அரசே, இவற்றுள் ஒன்றில் என்படம் இருக்கின்றது; அதைத் தொடுவீராயின், என்னையும் அதனோடு பெறலாம்.

மா. எந்த தெய்வமாவது என் புத்திக்குத் துணையா யிருக்குமாக! —ஏதோ பார்க்கிறேன்.-- இவைகளின் மீது எழுதியிருப்பதைத் திரும்பவும் வாசித்துப் பார்க்கிறேன்.—இந்த ஈயப் பெட்டி என்ன சொல்லுகிறது, "என்னை விரும்புவோன் தனக்குற்றதை யெல்லாம் அளிக்கவும் அழிக்கவும் துணிய வேண்டும்." அளிக்க வேண்டும்! எதற்காக? ஈயத்திற்காகவா இழக்கத் துணிய வேண்டும்? இந்தப் பெட்டி பய முறுத்துகிறது! எல்லாவற்றையும் இழக்கத் துணிவ

தென்றால் அதறகேதாவது நல்ல பிரயோஜனத்தைத் அடை யக் கூடும என்று கோரியே, அங்ஙனம் செய்கிறார்கள் மனி தர்கள். பொன போன்ற மேலான மனம இந்த இழிவாகிய ஈயத்தைக் கண்டு இரங்காது, ஆகவே நான் இந்த ஈயத்திறகாக எதையும கொடுக்கவுமாட்டேன், இழக்கத் துணியவுமாட்டேன. சுத்த வெண்ணிற முடைய வெள்ளி என்ன சொல்கிறது பார்பபோம: " என்னை விருமபுவோன் தன் யோக்கியதைக்குத் தக்கபடி பெறுவான் ".—தன யோக்கியதைக்குத் தக்கபடி? பொறு இங்கே, மார்த் தாணடா, உனது யோக்கியதையைப் பட்சபாதக மில்லா மல் ஆராய்ந்துபார். உனனுடைய மதிபபின்படி உன யோக்கியதையை ஆராயும பட்சத்தில் நீ பெறத்தக்கவனே! ஆயினும நான் பெறத் தக்கது இநதப பெண்மணி வரை யில் எட்டாமற் போகலாமே? ஆயினும் என் யோக்கிய தையைப பறறி நான் சந்தேகிப்பது என்னை நானே இழி படச் செயவ தாகும!—என யோக்கியதைக்குத் தக்கதெது? ஏன, இந்தப பெண்மணிதான்!—குலத்திலும, குடிபபிறப பிலும, செல்வத்திலும, குணத்திலும இவளைப பெறத் தக்கவனே! இவைகளை யெல்லாமவிட, என காதலால் இக் கனனிகையைப பெறத்தக்கவன் நான. மேலே போகாமல் இவவிடம கோரினுல் எனன? இனனொரு முறைபார்பபோம இநதப பொனனில் எனன வரைநதிருக்கின்றதென்று: " என்னை விருமபுவோன பலா விருமபுவதைப பெறுவான்."- ஏன, பலா விருமபுவது இபபாவையையே! உலகமுழுவதும இவ ளைத்தான் இச்சிககின்றது! நாநிலத்து நானகு திககு களிலிருந்து, உயிருடைய இத் தேவதையைத் தரிசித்து வழிபட வருகின்றனரே! தணடக ஆரணியமும, விசால மான அரபி தேசமும, இக் கட்டழகியைக காணவரும அரசகுமாரர்களுககுப பெருமபாதைக ளாயின! வானத்தை யும மதியாது தன் திரைகளால் காறி யுமிழும சமுத்திர ராஜனும, அயல்நாட டரசர்களைத் தடுக்க முடிய வில்லை. அவர்கள் அழகிய சரோஜினியைக் காண, ஆறறைக் கடந்து

வருவதுபோல் வருகின்றனர்.—இந்த மூன்று பெட்டிகளுள் ஒன்றில் இவ வணங்கின அழகிய பட மிருக்கின்றது. ஈயப பெட்டியில் அப்படம வைக்கப்பட் டிருக்குமா ? இழிவாக இவ்வாறு எண்ணுதலும பாதக மாம்! சமாதியில் வைககும படியான அவளது சாயச்சேலையை மறைக்கவும தக்கதல்ல. அல்லது, நல்ல சுத்தமாக்கப்பட்ட பொனனின் விலைக்குப பத்திலொரு பஙகு ஆகாத வெள்ளிப பெட்டியில, அவளுரு வம வைக்கபபட் டிருக்கின்றதாக நான எண்ணுவதோ? அப படி எண்ணுதலே பாபமாம்! ற்பபுயர் வில்லா இம மாணிக கம உத்தமமான தங்கத்தி லன்றி வைககபபடாது. சிஙகளத தில் தேவஸ்திரீயின உருவமைந்த பொன நாணயம ஒன றுண்டு.-ஆனால் அந்த உருவம பொன்னின்மீது செதுக்கப பட்டிருக்கிறது. இஙகோ, ஒரு அப்சரக கன்னிகை பொன ஹம படுக்கையில் படுத் துறஙகுகிறாள்.—சாவியைக கொடு என்னிடம், இதையே நான் கோருகினறேன, என் அதிர்ஷ் டத்தின்படி யாருக !

ச, இதோ, வாங்கிக் கொள்ளும அரசே, என் உருவம உளளே யிருக்குமாயின், நான் உமமுடையவளே !

மா. [பொன பெட்டியைத திறந்து] ஆ! கோரம! இதென்ன இருக்கிற திஙகே ? யமனுடைய கபாலம ! இதன் ஓட்டைக கண்ணில் காகிதச சுருள் ஒன்றிருககின்றது ! எழுதி யிருக கின்றதைப படிக்கிறேன், [படிககிறான.]

" மின்னுவதெல்லாம பொன்னல்லவெனச
சொன்னதை நீயும பனமுறை கேட்டாய ;
என் வெளி யுருவைப் பார்த்திடவே தம
இன னுயிரைப பலர் விற்பனை செய்தனர் ,
பொன்முலாம கோரியிற் புழுக்கள வசிககும.
வன்மனம போலவே விவேக முடைத்தாய்
உருவினி லிளமையும அறிவினில் முதுமையும
இருந்தையேல் இத்திறம் உத்தரம பெறுயநீ
வருவாய் சுகமாய் வாழ்ந்த துன் மணம். "

வாழ்ந்ததுதான் ! பட்டதெல்லாம் படு சூரண மாயிற்று. தாபம போயத் தணிக்கை வரவேண்டியதுதான். சரோஜினி, நான வருகிறேன.--பன் முறை சொல்லிப்போக என் னிதயம பொருது. தோற்றவர்கள கூறிப்போகும மாற்றம் இது தான். [தன் பரிவாரங்களுடன் போகிருன்.]

ச. சுலபத்தில் தொலைந்தது.—திரையை மூடிவிடுங்கள், போங்கள். இவரைபபோன்ற நிறமுடையவர்களெல்லாம இம மாதிரியே கோருவாராக ! [எல்லோரும போகிருர்கள்.]

**காட்சி முடிகிறது.**

---

## எட்டாம் காட்சி.

**இடம்—வாணீபுரம். ஒரு வீதி.**

**சாம்பநாதனும், சோமேஸ்வரனும் வருகிருர்கள்.**

சா. ஏன் அபபா, நான்தான் பானுசேனர் கபபலேறிச் சென்றதைக் கண்டேனே ; அவருடன் கிரிஜாநாதரும் போயிருக்கிருர் ; அவர்களுடைய கப்பலில் லீலாதரர் இல்லையென்று நான உறுதியாயச் சொல்வேன்.

சோ. பாதகனுன ஜைனன தன் கூக்குரலினுல் அரசரை எழுப்ப, அவனுடன் போனுர் அரசர், பானுசேனர் கபபலைத் தேடிப் பார்க்க.

சா. அவன் அதிக காலம பொறுத்து வந்தான், அவன் வருமுன் கப்பல் புறபபட்டுவிட்டது. ஆனுல், அவவிடத்தில், லீலாதரரும அவர் காதலியாகிய ஜலஜாவும ஒரு தோணியிற பார்க்கபபட்டதாக அரசருக்குத் தெரிவித்தார்கள். அன்றியும், பானுசேனர் சென்ற கப்பலில், அவர்களிருவரும இல்லையென்று அரசருக்கு அநந்தநாதர் தன உறுதி மொழி கொடுத்தார்.

சோ. தெருவுகளில் அந்த ஜைன நாய, விகாரம பிடித்தவன்போல், மதி கலஙகினவனுய், குணம மாறி மாறி, கூக்குரலிட்டுக் கோலாகலமாய, நடித்ததுபோல், நான் வேறெங்கும கேட்டதே யில்லே, "என் பெண்ணே ! ஹா ! என் பொன்னே ! ! ஹா ! என் பெண்ணே ! ஒரு ஹிந்துவுடன் ஓடிப்போய்விட்டாளே ! ஹா ! என் பிலேச்சப் பொன்னே ! நியாயமே • நீதிச சட்டஙகளே !—என் பொன்னே ! என் பெண்ணே ! முத்திரை வைககபபட்ட ஒரு பை, முத்திரை யிடபபட்ட இரணடு பொன பைகள !—என் பொனனே என்னிடமிருந்து என பெணணே திருடிக்கொணடு போய்விட்டனளே ! அன்றியும நகைகள !—இரண்டு ரத்னஙகள ! விலே யிலாத இரண்டு சிறநத ரத்னஙகள !-என பெண் திருடிக்கொண்டு போயவிட்டனளே ! நியாயமே !—என பெண்ணேக் கண்டு பிடி ! அந்த ரத்னஙகளும அந்தப பொன்னும அவள வசமிருக்கினறன !"

சா. ஏன், அவன் ரதனமே, அவன பெண்ணே, அவன் பொன்னே, எனறு கூவிக்கொண்டு வாணிபுரத்திலுளள சிறு பிளளேகளெல்லாம பின தொடாகினறனா அவனே.

சோ. நமது அநந்தநாதர் குறித்த தவணேபபடிச் செலுத்து வாராக, இல்லாவிடின, இதற்காக அவர் கஷடப்பட வேணடிவரும.

சா. ஆமாம, நன்ருய ஞாபகபபடுத்திஞய ; நான் நேற்றைத் தினம பஸ்சிம தேசத்தான ஒருவனுடன வார்த்தையாடிக் கொண்டிருந்தேன ; அவன், நமது தேசத்துச் செல்வம நிறைந்த ஒரு கபபல், பஸ்சிம நாட்டிற்கும் சிஙகளத்திற்கும் இடையிலுளள நெருக்கமாம சமுத்திரத்தில், மூழ்கிப்போனதாகச் சொன்னன. இதை அவன் எனக்குச் சொன்ன பொழுது அநந்தநாதர் ஞாபகம எனக்கு வர, அவருடைய கபபலா யிரா திருக்குமாக, என்று என்மனத்திற்குள் கோரிக் கொண்டேன்.

சோ. நீ கேட்டதை அநந்தநாதருக்குத் தெரிவித்தல் நலமெனத் தோற்றுகிறது; ஆயினும் இடரென்று கூறுதீர்: ஏனெனில் அது அவருக்கு வருத்தத்தை யுண்டு பண்ணினும் பண்ணும்.

சா. அவரைவிட உத்தமமான மனிதன் இம்மண்ணுலகிலேயே கிடையாது. பானுசேனரும் அநந்தநாதரும் ஒருவரைவிட்டொருவர் பிரியும்பொழுது நான் பார்த்தேன்; பானுசேனர் கூடிய சீக்கிரத்தில் திரும்பிவர முயல்வதாகக் கூறினார் அவரிடம்; "அப்படிச் செய்யவேண்டாம் பானுசேனா, என் பொருட்டு அவசரப்பட்டு வேலையைக் கெடுக்காதே. பக்குவமாம் காலம் வரையில் அங்கே தங்கியிரு; நான் ஜைனனுக்கு எழுதிக் கொடுத்திருக்கும் பத்திர விஷயம், காதலோடு கூடிய உன் மனத்தில், நுழையவேண்டாம். மனத்தில் சந்தோஷத்துடனிரு; உனது காதலியின் காதலைப் பெறுதற்குச் செய்யவேண்டிய காரியங்களில் உனது மனத்தை முக்கியமாய்ச் செலுத்துவாயாக. அவ்விடம் உனது சவுகர்யத்திறத் தக்கபடி உனது காதலை வெளிப்படுத்தக்கூடிய நன் மார்க்கங்களில் முயல்வாயாக" என்று பதில் உரைத்தார். இதைக் கூறி முடிந்ததும், தனது கண்களில் நீர் ததும்ப, முகத்தைத் திருப்பிக்கொண்டு, பின் புறமாகத் தன் கரத்தை நீட்டி, அனைவரும் அதிசயப்படக்கூடிய அதிக அன்புடன், பானுசேனர் கரத்தைப் பற்றினார்; இங்ஙனம் அவர்கள் ஒருவரைவிட்டொருவர் பிரிந்தனர்.

சோ. உலகத்தில் அவர் பற்று வைத்திருப்பது, பானுசேனர் ஒருவர் பொருட்டே என எண்ணுகிறேன். நாம் போய் அவரைத் தேடிக் கண்டுபிடித்து, அவரது மனத் துயரை ஏதாவது வேடிக்கை விநோதத்தினாலாவது மாற்றுவோமாக, வாரும் விரைவில்.

சா. அங்ஙனமே செய்வோம். [போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

---

## ஒன்பதாம் காட்சி.

**இடம்—*மணிபுரம். சரோஜினியின் வீட்டில் ஓர் அறை.***

**நீலகேசி ஒரு வேலையாளுடன் வருகிருள்.**

நீ. *சீக்கிரம்! சீக்கிரம்! நான் உன்னைக் கேட்டுக்கொள்ளுகிறேன், திரையைத் தள்ளிவிடு சரியாக: அருகபுரத் தரசன் சத்தியம் செய்துவிட்டு, இதோ வந்துவிட்டார் கோருவதற்காக.*

**எக்காளம். அருகபுரத்தரசனும், சரோஜினியும் தங்கள் *பரிவாரங்கள் சூழ வருகின்றனர்.***

ச. *அரசே, அதோ பாரும்.—பெட்டிகள் இருக்கின்றன. என் படமிருக்கும் பெட்டியை நீர் கோருவீராயின் உடனே நமது கலியாணச் சடங்குகள் நிறைவேற்றப்படும். நீர் அதில் தவறிப்போவீராயின், மறுபடி வார்த்தையாடாது, உடனே இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போகவேண்டும்.*

அ. அ. *மூன்று விஷயங்களை நான் கவனிப்பதாகச் சத்தியம் செய்திருக்கிறேன், முதலில், நான் எந்தப் பெட்டியைக் கோரினேன் என்பதை ஒருபொழுதும் ஒருவருக்கும் வெளியிடக்கூடாதென்றும், பிறகு, சரியான பெட்டியைக் கோராவிட்டால், மரிக்குமளவும் மற்றொரு மாதை வரிப்பதில்லையென்றும், கடைசியில், என் துரதிர்ஷ்டத்தால் நான் தவறிப்போவேனாயின், உடனே உன்னைவிட்டுப் பிரிந்து ஊர்போய்ச் சேரவேண்டுமென்பதே.*

ச. *பாக்கிய ஹீனையாகிய என்னைப் பாணிக்கிரஹணம் செய்துகொள்ளக் கோரி வரும் ஒவ்வொருவரும், இம்மாதிரிதான் சத்தியம் செய்யவேண்டியிருக்கிறது.*

அ.அ. *நானும் அதன் பொருட்டே ஆயத்தப்பட்டு வந்திருக்கிறேன். என் ஹிருதயத்தின் கோரிக்கையின்படி அதிர்ஷ்டமும் கைகூடுமாக!—பொன், வெள்ளி, மட்ட ஈயம். "என்னை விரும்புவோன் எல்லாவற்றையும் கொடுக்கவும் இழக்கவும்*

துணிய வேண்டும்." உன்பொருட்டு நான கொடுபபதன் முன, அல்லது இழககத் துணியுமுன், நீ இதைபபார்க்கி லும மிகொஞசம அழகாயத் தோற்றவேண்டும். பொன் பெட்டி எனன சொல்கினறது? ஆ! எதோ, பார்க்கிறேன்; "எனனை விருமபுவோன பலர் விருமபுவதைப் பெறுவான" பலா விருமபுவதை"—அநதப பலா என்கிற பதத்திற்கு, மூடர் என்று அர்த்த மாயிறு மாகும, உலகத்தில் சாதா ரண ஜனஙகள, உளளே யிருபபதை ஆராயந் தறியாது, தூக்கணங குருவியானது அபாயம நேரிடுவதறகு நேர் வழி யில், சுவரின வெளிபபுறததில், காறறடிக்கும பக்கத்தி லேயே கூடு கட்டுவதுபோல, தஙகளுடைய மூடக் கண்கள அறிவிபபதைவிட அதிகமாய ஆராயந் தறியாது, வெளிப பார்வையைக் கொண்டு விருமபுவாாகள. பலர் விருமபு வதை நான் விருமபேன, ஏனெனில், சாதாரண ஜனஙக ளுடன ஒருஙகு சோநது நாகரிகமற்ற மனிதக் கூட்டத்தில் நானுமொருவனாக மதிககபபடுவது எனக் கிஷ்ட மில்லை— சரி, ஆனால் வெள்ளிப பெட்டியிடம திருமபுவோம. உன்மீது எழுதியிருக்கும பட்டத்தை மறுபடியும தெரிவிபபாய எனக்கு. "எனனை விருமபுவோன தன் யோக்கியதைக்குத தக்கபடி பெறுவான்." நனறுகச சொல்லப்பட்டது. தன னிடத்தில யோக்கியதை யினறி, அதிர்ஷ்டவசத்தால் மரி யாதையைப் பெறலாமெனறு மதித்துச் செல்கின்றவ னெவன? தனக்குத் தகாத கௌரவத்தை வஹிக்கவேண்டு மென்று தரணியில ஒருவனும ஆசைப்பட வேண்டாம. ஹா! உலகத்தில் உத்தம ஸதிதிகளும, உன்னத பதவி களும, உத்தியோகஙகளும, துர்வழியில் சமபாதிக்கபபடா திருக்குமாக! களஙக மற்ற கௌரவத்தை ஒருவன தன் நற குணத்தைக் கொணடே பெறுவானாக! அபபடி யிருக்கு மாயின், இபபொழுது காலால் நடபபவர்கள் எத்தனை பெயர்கள் கனக தண்டி ஏறவேணடும்! இபபொழுது எஜ மானர்களா யிருக்கும எத்தனை பெயர் வேலைக்காரர்களா யிருக்கவேணடும! இபபொழுது உத்தமர்கள என்று மதிக்

கப்படுபவர்களுள் எத்தனை இழிந்தவர்களைப் பொறுக்கி எடுத்துவிட வேண்டும்! தவிட்டிலிருந்து அரிசியைப் பொறுக்குவதுபோல், காலகதியால் அழிந்தவர்களுக்குள், எத்தனை உத்தமர்களைப் பொறுக்கி எடுக்கலாம், புதிதாய்ச் சோபிக்கும்படியாக? சரி, அதிருக்கட்டும், நான் தீர்மானம் பண்ணவேண்டும். "என்னை விரும்புவோன் தன் யோக்கியதைக்குத் தக்கபடி பெறுவான்." என்னிடம் யோக்கியதை இருப்பதாக மதிக்கின்றேன். இதன் சாவியைக் கொடு உடனே இதைத் திறந்து, இதில் என் அதிர்ஷ்டத்தைக் கண்டறிகிறேன்.

[வெள்ளிப் பெட்டியைத் திறக்கிறான்.]

ச. அதிலிருப்பதைப் பார்ப்பதற்கு அத்தனை நேரமேன்?

அ. அ. என்ன இருக்கின்றது இங்கே? எனக்கொரு காகிதச் சுருளைத் தருகிற முழு முண்டத்தின் படம் ஒன்று! அதைப் படித்துப் பார்க்கின்றேன்.—சரோஜினிக்கும் உனக்கும் எவ்வளவு பேதமிருக்கின்றது! நான் கோரியதற்கும் பெறுவதற்கும் எவ்வளவு வித்யாசம்! "என்னை விரும்புவோன் தன் யோக்கியதைக்குத் தக்கபடி பெறுவான்." முழு முண்டத்தின் தலை தவிர வேறொன்றும் பெறுதற்குத் தக்கவனல்லவா? இதுதானா எனக்குப் பரிசு? இதைவிட மேலானதைப் பெற எனக்கு யோக்கியதை இல்லையா?

ச. குற்றம் செய்வதும், தீர்ப்பு செய்வதும், குவலயத்தில் வெவ்வேறு தொழில்களாம், அன்றியும் ஒன்றுக்கொன்று விரோதமான சுபாவமுடையது.

அ. அ. என்ன இருக்கிறது இங்கு?

"பழுதற அனலிலிது பரிசோதித்த தெழுவிசை;
பாரினில் தவறின்றி பகுத்தறியும் புத்தியும்
எழுவிசைச் சோதித்தே ஏற்றபடியாகும்,
நிழலை முத்தமிடும் நிர்மூடரு முண்டேதான்,
அன்னவருக்கோ அத்துணை தான் சுகமும்

வெளவேடமபூண் வெறியரு ழுண்டே,
அமமாதிரியே இதுவு மாகும
காதலி எவளேக கைபபிடித்தாலு நீர்,
உமது தலேயாய உலகினி லிருபபேன்.
உடனே போகலாம, வேலேயு முடிநதது !"
இனனும இருபபனேல், இதனிலும ஏட்டனவென.
மணககக வநதது, மடதநலே யொனறுடன்,
மறுத்தும போவது மடத்தலே இரணடுடன.

பெணமணி, விடை யளிபபாய ; செயத சத்தியம பிசகேன் ;
என் வருத்தத்தைப பொறுமையோடு சகிபபேன.

[தன் பரிவாரங்களுடன் போகிறுன்.]

ச. இப்படித்தான, விளக்கு விட்டிலே எரித்தது ! அந்தோ !
என்ன சுத்த முட்டாளகள ! கோருகிற சமயத்தில், தங்கள்
புத்தியிஞலேயே தோல்வி யடையும படியான யுக்திமாத்திரம
இருக்கின்றது.

நீ. "தலேவிதியினபடியே தாரமுமதண்டனேயும", எனகிற பழ
மொழி வீண போகுமா ?

ச. வா, போவோம.—திரையைத் தளளிவிடு, நீலகேசி.

ஒரு வேலேயாள் வருகிறுன்.

வே. எங்கே என எஜமானி ?

ச. இதோ ; என்ன வேண்டும உனக்கு ?

வே. அமமணி, தமது வாசறபடியில் வாணீபுரத்து வாலிபா ஒரு
வர் இழிந்திருக்கிறுர்; தனது எஜமான வரவைத் தானமுன்
னதாகக் தெரிவிக்க வந்ததாகக் கூறுகிறுர். அவரிடமிருந்து
தக்க மரியாதைகளுடன் வந்திருக்கிறுர். உபசார வார்த்தை
களும உன்னத மொழிகளும அன்றி, உயாந்த வெகுமதி
களேயும கொண்டுவந் திருக்கிறுர். இவரைப்போன்ற
உண்மையான காதலுக்குத் தகுந்த உத்தமமான தூதனே,

இதுவரையில நான கணடதில்லை. சுகத்தைத் தரும இள வேனிற் காலம வந்துவிட்டது எனபதைக் குறிப்பதறகாகத தென்றற காற்று முனனல் வீசுவதேபோல, தன் எஜமான னுக்கு முன்பாக இத்தூதர் வந்திருககிருர்.

ச. போதும நிறுத்து, வேண்டுகிறேன் உனனை, இவ்வளவு அதிகமாய் நீ அவரைபபற்றிய புகழவதைப பார்த்தால், சீக்கிரத்தில், அவர் எனனுடைய பந்து, எனறு கூறி முடிப பாயென அஞசுகிறேன் சற்று.—வா, வா, நிலகேசி, இவ வளவு மரியாதையுடன வருகிற வேகமுடைய மன்மதனை தபாலைக் காண விருமபுகிறேன மிகவும.

நீ. அந்த மன்மதன் கிருபையால் அவர் பானுசேனரா யிருப் பாராக ! [எலலோரும போகிருர்கள.]

காட்சி முடிகிறது.

---

# மூன்ரும் அங்கம்

## முதற் காட்சி

இடம்—வாணீபுரம். ஓர் வீதி.

சோமேஸ்வரனும் சாமிநாதனும் வருகிருர்கள்.

சோ. என்ன, ஐயா, இப்பொழுது ரேவில் விசேஷம ?

சா. ஏன், விலை யுயர்ந்த சரக்குகள் நிறைந்த அநந்தநாதருடைய கப்பலொன்று நடுக் கடலில் முழுகிப்போனதாக எல்லோ ரும் பேசிக்கொள்ளுகிருர்கள். அது பொய்யென்று மறுப் பாரைக் காணேம். முழுகிபபோன இடத்தின் பெயர் பாம பன் குடா என்று சொல்கிருர்களென நினைக்கிறேன். அது மிகவும் அபாயகரமான இடமாம. அவ்விடத்தில், அநேகம்

பெரிய கப்பல்கள் இதுவரையில் முழுகிப் புதைந்து கிடக்கின்றனவாம், வதந்தி உரைப்பதை உண்மையென நாம் நம்பக்கூடுமாயின்.

சோ. மற்ற அநேக விஷயங்களில் பொய்யா யிருப்பதுபோல், இதிலும் வதந்தி பொய்யா யிருக்குமாக. ஆயினும் வீண் வார்த்தை யாடாமல், வெறும் வார்த்தைகளில் காலம் போக்காமல், உண்மையைக் கூறுமிடத்து,—நமது தர்ம புருஷனுகிய அநந்தநாதா—உத்தமனை அநந்தநாதர்—அவருடைய பெயருடன் சேர்த்துச் சொல்லத் தகுந்த யோக்யதையுடைய பட்டம் ஒன்று இருக்குமாகாதா !—

சா. முடிவைச் சொல்லும், சீக்கிரம்.

சோ. ஆ !—என்ன கேட்கின்றீர் ?—ஏன், முடிவென்னவென்றால், அநந்தநாதருடைய கப்பலொன்று அமிழ்ந்து போனது தான்.

சா. இதுவே அவருடைய துர் அதிர்ஷ்டத்தின் முடிவும் ஆகுமெனக் கோருகிறேன்.

சோ. 'ததாஸ்து' என்று நான் சொல்லுமுன், மாறுபாடி வடிவு கொண்ட இந்த மாயாவி வருகிறான்.

ஷாம்லால் வருகிறான்

ஷாம்லால், என்ன விசேஷம்? வர்த்தகர்களுக்குள் ஏதாவது விசேஷம் உண்டா ?

ஷா. என் பெண் வீட்டைவிட்டு ஓடிப்போன விஷயம் உங்களுக்குத்தான் தெரியுமே. உங்களுக்குத் தெரிந்தபடி வேறு யாருக்குத் தெரியும் ?

சா. அது வாஸ்தவம், என் வரைக்கும், அவள் பறந்துபோவதற்காக பட்சி இறகுகள் செய்துகொடுத்தானே, அந்த தையற்காரனை எனக்கு நன்றாயத் தெரியும் ?

சோ. அவன் வரைக்கும், ஷாம்லாலுக்கு, அந்தப் பட்சிக்கு இறகு உண்டாகிவிட்டது என்று தெரியும். அந்தப் பருவம் வந்த

பிறபாடு, அந்த ஜாதிப பட்சிகளெல்லாம தாயைவிட்டுப் பறந்து போவது சுபாவமதான்.

ஷா. அப்படிச் செயததற்காக அவள் நாசமாய்ப் போகட்டும !

சோ. உனனை நியாயாதிபதி யாக்கிஞல் அபபடித்தான தீர்மானம செயவாய.

ஷா. என் சொந்த உதிரமும ஊனும, எனக்கே விரோதியா கிறதா ?

சா. கிழப பிணமே ! இன்னும அந்த நினைவா ? இத்தனை வயு தாகியுப இந்த விரோதமா ?

ஷா. என பெண என்னுடைய சொந்த உதிரமும ஊனும என்று சொலகிறேன்.

சா. உன் உடலுக்கும அவள உடலுக்கும, அட்ட கரிக்கும் அழ கிய தநததிறகும உள்ள பேதத்தைவிட, அதிக பேத மிருக்கிறது. அழகிய 'கோவைக்கும, அவிந்த கொள்ளிக் கும உளள வர்ண பேதத்தைவிட, உஙகளிருவருடைய உதிரத்திறகும அதிக வித்யாச மிருக்கிறது.—அதிருக்கட் டும, அநந்தநாதருக்குக் கடலில் ஏதாவது நஷடம் நேரிட்ட தாகக் கேளவிபபட்டாயா இல்லையா? சொல் எங்களுக்கு.

ஷா. அதோ, அது ஒரு பேரிழவு. கையிலே இருக்கிறதை யெல் லாம அழித்துவிட்டு திவாலானுன்; தலையைக் காட்ட மாட்டேன் எனகிருன ரேவில்; முன்பெல்லாம் என்ன ஒழுங் காக வருவான கடைத் தெருவில், பிச்சைக்காரன்! அவன் பத்திரத்தினமீது கவனம வைக்கட்டும! எனனை அநியாய வட்டி வாஙகுபவன் எனறு ஏளனம செயதவனல்லவா ? அவன் பத்திரத்தின்மீது கவனம வைக்கட்டும! பணத்தை வட்டியில்லாமல் பட்சத்துக்காகக் கொடுபபவனல்லவா ? அவன் பத்திரத்தின்மீது கவனம வைக்கட்டும் !

சா. இதென்ன! அவர் பத்திரத்தின்பிரகாரம் கொடுப்பதற்குத் தவறினால் அவருடைய மாமசத்தையோ எடுத்துக்கொள்ளப் போகிறாய்? சீ! அது எதற் குபயோகப்படும்?

ஷா. மீன் பிடிக்க! அது வேறொன்றின் பசியைத் தீர்க்காவிட்டாலும் என் க்ஷாத்திரத்தின் பசியையாவது தீர்க்கும்! அவன் என்னை அவமானப்படுத்தி, ஒரு அரைகோடி பொன் நஷ்டம் விளைத்திருக்கிறான். என் நஷ்டத்தைக் கண்டு நகைத்திருக்கிறான். நான் லாபம் பெறுவதைப் பார்த்து ஏளனம் செய்திருக்கிறான். என் ஜாதியைப் பழித்திருக்கிறான். என் லேவாதேவிகளுக் கெல்லாம் குறுக்காக வந்து கெடுத்திருக்கிறான். என் சினேகிதர்கள் பிரீதியையெல்லாம் தணித்திருக்கிறான். என் பகைவரையெல்லாம் தூண்டிவிட்டிருக்கிறான்! இவைகளுக்கும் அவனுடைய காரணம் என்ன? —நான் ஒரு ஜைனன்! ஜைனனுக்குக் கண்களில்லையா? ஜைனனுக்குக் கைகளில்லையா? அவயவங்க ளில்லையா? அந்தக்கரணங்க ளில்லையா? இந்திரியங்களில்லையா? ஆசாபாசங்க ளில்லையா? ஹிந்துவைப்போலவே ஒரே உணவைக் கொள்கிற தில்லையா? ஆயுதத்தால் காயப்படுத்தினால் இவனுக்கிருப்பது போலவே அவனுக்கும் நோயிராதா? இவனுக்கு வருவதுபோலவே அவனுக்கும் வியாதி வருவதில்லையா? ஒரேவித சிகிச்சையால் இருவரும் சுவஸ்தப்படுகிறதில்லையா? வெயிலினால தாபமும், மழையினால் குளிர்ச்சியும், இவனுக் குண்டாவதுபோலவே அவனுக்கு முண்டாவதில்லையா? நீங்கள் ஊசி எடுத்து எங்களைக் குத்தினால் எங்களுக்கு இரத்தம் வருவதில்லையா? நீங்கள் எங்களுக்குக் கூச்சம் காட்டினால் நாங்கள் நகைப்பதில்லையா? எங்களுக்கு நீங்கள் விஷம் கொடுத்தால் நாங்கள் சாவதில்லையா? இதெல்லாமிருக்கும்பொழுது, நீங்கள் எங்களுக்குத் தீங்கிழைத்தால் நாங்கள் பழி தீர்த்துக் கொள்ளமாட்டோமா? மற்ற விஷயங்களிலெல்லாம் உங்களை யொத்திருந்தால், இதிலும் உங்களை ஒத்திருக்கிறோம். ஒரு ஜைனன் ஒரு ஹிந்துவுக்குக் கெடுதிசெய்தால், எப்படிப் பொறுக்கின்றான்?

உடனே பழி வாங்குகிறான். ஒரு ஹிந்து ஜைனனுக்குக் கெடுதி செய்தால், ஹிந்து நடந்து காண்பித்த வழியின் படியே, ஜைனன் அதை எப்படிப் பொறுக்க வேண்டும்? ஏன், உடனே பழி வாங்க வேண்டியதுதான். பழி வாங்கும் வித்தைை நீங்கள் எனக்குக் கற்பித்தபடி, நானும் செய்து முடிக்கிறேன்; அதுவும் நீர் கற்பித்ததைவிட அதிகமாகச் செய்து காட்டுகிறேன்.

ஒரு வேலையாள் வருகிறான்.

வே. ஐயா, என்னுடைய எஜமானர், அநந்தநாதர், வீட்டிலிருக்கிறார்; உங்களுடன் ஏதோ பேசவேண்டுமென்று விரும்புகிறார்.

சா. அவரைத் தேடித்தான் நாங்கள் இங்கும் அங்குமாய் அலைந்துகொண்டிருந்தோம்.

சோ. இதோ இவன் ஜாதி மனுஷ்யன் இன்னொருவன் வருகிறான். இவ் விருவர்களுக்குச் சமானமான மூன்றாவது ஆசாமி வேண்டுமானால், க்ஷாம தேவதைதான் மாறுபாடி வேஷம் போட்டுக்கொண்டு வரவேண்டும்.

[சோமேஸ்வரன், சாம்பநாதன், வேலையாள், போகிறார்கள்.]

தூப்லால் வருகிறான்.

ஷா. என்ன சமாசாரம், தூப்லால்? தூத்துக்குடியிலிருந்து ஏதாவது சமாசாரம் வந்ததா? என் பெண்ணைக் கண்டுபிடித்தனையா?

தூ. நான்தேடிப்போன இடங்கள் அநேகத்தில், அவளைப்பற்றி கேள்விப் பட்டேனே யொழிய, அவளை நேராகக் கண்டு பிடிக்கவில்லை.

ஷா- ஐயோ! போச்சே! போச்சே! போச்சே! போச்சே! போச்சுது, இரண்டாயிரம் பொன் கொடுத்து பிறுக்கு கோட்டை

யில் வாங்கிய வயிரம் போயச்சுது! இப்பொழுதுதான் நம்முடைய ஜாதிக்கு சனியன் பிடித்தது! இதுவரையில் எனக்கு வந்து அது பிடியாம லிருந்தது.—அது ஒரு இரண்டாயிரம் பொன் இன்னும் எத்தனை யத்தனை விலையுயர்ந்த நகைகள்!—ஐயோ! அந்தப் பாழாய்ப்போன பெண் என் காலண்டை செத்துக்கிடந்தாலும் பெரிதல்ல, அந்த நகைகள் மாத்திரம் அவள் காதிலிருந்தால் போதுமெனக்கு! என் கண்ணெதிரிலேயே அவளுக்குப் பாடை கட்டிலும் பாரத திருப்பேன், பக்கத்தில் பணமிருந்தால் போதுமே! அவர்களைப்பற்றி ஒரு சமாசாரமும் தெரியவில்லையா? அது என்னப்படி?—தேடிக் கண்டு பிடிக்க எவ்வளவு செலவாச்சுதோ அறியேன் நான். ஐயோ! நஷ்டத்தின்பேரில் நஷ்டமா? திருடிக்கொண்டுபோனது எவ்வளவு! அவளைத் தேடிக் கண்டுபிடிக்க எவ்வளவு! ஐயோ! இவ்வளவுக்கும் திருப்தி ஒன்றையும் காணோம், பழி வாங்கல் ஒன்றையும் காணோம். உலகத்திலுள்ள துரதிர்ஷ்டமெல்லாம் என் தலையிலதானா வந்துவிழவேண்டும்! உலகத்திலுள்ள பெருமூச்செல்லாம் என்னுடையதுதானா? உலகத்திலுள்ள கண்ணீரெல்லாம் நான் சொரிவதுதானா?

தூ. ஆம், ஐயா, மற்றவர்களுக்கும் துரதிர்ஷ்டம் நேர்கிறது. நான் தூத்துக்குடியில் கேள்விப்பட்டபடி அநந்தநாதருடைய

ஷா. என்ன! என்ன! என்ன! துரதிர்ஷ்டமா?—துரதிர்ஷ்டமா?

தூ. —திருப்பாப்புலியூரிலிருந்து சரக்குகள் கொண்டுவந்த பெரிய கப்பலொன்று, முழுகிப் போய்விட்டதாம்.

ஷா. கடவுளுக்கு ஸ்தோத்திரம் செய்கிறேன்! கடவுளுக்கு ஸ்தோத்திரம் செய்கிறேன்! இது உண்மைதானே? இது உண்மைதானே?

தூ. முழுகிப் போன கப்பலினின்றும் தப்பிவந்த சில மாலுமிகளுடன் நேராகப் பேசினேன் நான்.

ஷா. தூப்லால், தூப்லால், உனக்கு வந்தனம செய்கிறேன்! நல்ல சமாசாரம கொண்டுவந்தாய! சுப சமாசாரம! ஹா! ஹா! —எங்கே அது? தூத்துக்குடியிலா?

தூ. தூத்துக்குடியில, நான் கேளவிபபட்டபடி உமது பெண் ஒரு இரவில் எண்பது பொன செலவழித்தாளாம.'

ஷா. ஐயோ! என ஹிருதயத்தில் ஈட்டியால் குததுகின்றுயே! போன பொனனை நான திருமபிப பாாககபபோகினறதில்லை; உட்கார்ந்தபடி எணபது பொன! எணபது பொன்!

தூ. எனனேடு அநந்தநாதருககுக கடன கொடுத்திருக்கும அநேகர் வாணீபுரத்துக்கு வந்தனர், அவாகள் அவன எபபடியும திவால் எடுக்கவேணடியதுதான, என்று சொல்லுகிறார்கள.

ஷா, நிரமப சநதோஷம! விடுகினறேன பார் அவனை! உயிரோடு வதைககினறேன! மிகவும சந்தோஷம!

தூ. அவர்களில் ஒருவன உன மகளுக்குத் தான் கொடுத்த ஒரு கிளிக்குப பதிலாக அவள கொடுத்த ஒரு மோதிரத்தைக் காண்பித்தான.

ஷா. அவள பாழாயப்போக! தூபலால், என்செவியில் நாராசத்தை விடுகிறுயே! அது என மாணிக்க மோதிரமாயிற்றே, அது லலிதா விவாஹ மாவதன முன்பு எனககுக் கொடுத்ததாயிறறே! கோடி கிளிகளைக் கொடுப்பதாலுலும அதை நான கொடுத்திருக்கமாட்டேனே!

தூ. ஆனுலும, அநந்தநாதர் எனனவோ திவால்தான்.

ஷா. ஆம, ஆம. அது உண்மையே, மிகவும உணமையே! தூப்லால, போய உடனே எனக்காக ஒரு நியாயவாதியை ஏறபாடு செயதுவை. பதினைந்து நாள் முன்பாகவே பேசிவிடு. அநந்தநாதன் தவறிப போனுல், அவன ஹிருதயத்தை வெட்டி எடுக்கிறேன. அந்தப பாபி எப்படியாவது வாணீபுரத்தை

விடடுத் தொலைந்தால், என் வியாபாரத்தை என ஙிசசை படி நடத்துவேன. போ! போ! தூபலால, நமது மடத் தண்டை வந்து எனனேடுசேர். போ, அபபா, தூபலால, —நமமுடைய மடத்தணடை,—தூபலால்! [போகிறுாகள.]

**காட்சி முடிகிறது.**

---

# இரண்டாம் காட்சி.

**இடம்—மணிபுரம். சரோஜினியின் வீட்டில் ஓர் அறை.**

**பானுசேனன், சரோஜினி, கிரிஜாநாதன், நீலகேசி,**

**பரிஜனங்கள் வருகிறுர்கள்.**

ச. உமமை நான் வேண்டிக்கொள்ளுகிறேன், பொறும. நீர் உமது அதிர்ஷடத்தைப் பார்ப்பதனமுன், ஒரு நாள் இரண்டு நாள நிதானியும; நீர் தவருகக் கோரிஞல், உமமை நானிழக்கவேண்டி வரும ; ஆகவே கொஞசம நிதானியும. எனக்குள ஏதோசொல்லுகின்றது, உமமை நான இழக்க மாட்டேன என்று. ஆயினும அது காதல் அல்ல.—வெறுப் பிஞல் இமமாதிரியான யோசனைகள உண்டாகமாட்டா, என் பது உமக்கே தெரியும. மஙகையர் மனத்தி லெண்ணுவ தொழிய, மற்றும வாய் திறந்து மொழிதல் அழகலாத தாயினும, என் உளளத்தை எங்கு நீர் நன்ருய் அறியா திருக்கிறீரோ என அஞசினவளாய், நீர் எனக்காகத் துணி வதன் முன, உமமை ஒரு இரண்டு மாத காலம இவ விடத்தே தங்கியிருக்கச் செய்வேன். நீர் சரியாகக் கோருமபடி சொல்லிக்கொடுக்க எனக்குத் தெரியும்.—ஆனுல் அப் படிச் செய்வே ஞயின, செய்த சத்தியம தவறினவளாவேன், அபபடி ஒருகாலும நான் ஆகமாட்டேன்; ஆகவே நீர் எனனை இழக்க வேண்டி வரினும வரும. அப்படி இழபபீ ராயின், சத்தியம தவறியாவது நடந்திருக்க லாகாதா, என்று அந் தப் பாபத்தைக் கோரும்படிச் செய்வீர் என்னை. ஐயோ!

உமது கண்கள் செய்யும் கொடுமையைப் பாரும்! அவைகள் என்மீது பட்டபோதே என்னை இரண்டு பிரிவாக்கின! என்னில் பாதி பாகம் உம்முடையதாம்.—மற்றொரு பாதியும் உம்முடையதாம் — என்னுடையது என்று சொல்ல வேண்டும், ஆனால் என்னுடையதானால், உம்முடையதே! ஆகவே, எல்லாம் உம்முடையதே! என்ன கலிகாலமிது! சொந்தக்காரர்கள் சொத்தை அனுபவிப்பதற்குத் தடைகளைப் போடுகின்றதே! ஆகவே உம்முடையதாயிருந்தாலும், உம்முடையதல்ல! உம்முடையதென்று விதியும்— அதன் பொருட்டு அதிர்ஷ்டமானது அருநரகிற்குப் போகட்டும்,—நான் போகேன். நான் அதிக நாழிகை பேசுகிறேன், ஆயினும் அங்ஙனம் செய்வது காலத்தை நீட்டி வளர்த்தி, அதிகப்படுத்தி, உம்மைக் கொஞ்சம் நிதானிக்கும்படிச் செய்யும் பொருட்டே.

பா. நான் கோருகின்றேன் விரைவில்,—ஏனெனில் இப்படி இருப்பது, முட்பிப்பாயில் இருப்பதுபோ லிருக்கின்றதெனக்கு.

ச. முட்பிப்பாயிலா? ஆனால் உமது காதலுடன் என்ன துரோகமும் உம்மிடத் திருக்கிறது சொல்லும்.

பா. என் காதலை நான் அனுபவிப்பேனோ என்று எனக்குள் பயப்படுகின்றேனே, அந்த அவலக்ஷணமுடைய சந்தேகமெனும் துரோகம் தவிர வேறொன்றுமில்லை. என் காதலுடன் துரோகமானது கலந்திருப்பதை விட, நீரும் நெருப்பும் ஒருங்கே சிநேகமாய் ஓரிடத்தில் வாழும்.

ச. ஆம், ஆயினும் முட்பிப்பாயில் விட்டால், பலாத்காரமாய் மனிதர் எதையும் சொல்வதைப்போல, நீரும் இவ்வண்ணமாய் கூறுகிறீர் என்று அஞ்சுகின்றேன்.

பா. எனக்கு உயிரளிப்பதாகச் சொல், உண்மையை உரைக்கின்றேன்.

ச. சரி! உண்மையை உரைத்து உயிர்வாழும்.

பா. உன்னுடைமையை உரைத்து உன் காதலைப் பெறவேண்டுமென்பதே என் உட்கருத்தாம் — ஹா! என்ன சுகமான ஹிம்சை! என்னை ஹிம்சிப்பவரே அந்த ஹிம்சையினின்றும் நீங்க வழி கற்பிக்கிறார்! அதிருக்கட்டும், பெட்டிகளைக் காட்டச் சொல், என் அதிர்ஷ்டத்தை நான் பார்க்கவேண்டும்.

[பெட்டிகளின் முன்னிருக்கப் பட்ட திரையானது தள்ளப் படுகிறது.]

ச. சரி. போம் ஆகுல், அவைகளில் ஒன்றில் நான் பூட்டப் பட்டிருக்கின்றேன். என்மீது உண்மையான காதல் உமக்கிருக்குமாயின், எப்படியும் என்னைக் கண்டெடுப்பீர். —நீலகேசி, நீயும் மற்றவர்களும் ஒரு புறமாக நில்லுங்கள்; அவர் தேரும்பொழுது சங்கீதம் வாசிக்கப்படட்டும், அவர் தோல்வி யடைவாராயின், கோகிலங்கள் மரிக்கும் காலத்தில் பாடிய பாடல்களாகும். அந்த உபமானமானது முற்றிலும் சரியாகும்படி, என் கண்ணீரானது அவர் மூழ்கி மரித்திடும் வெள்ளப் பெருக்காகுக! ஒருகால் அவர் ஜெயிக்கலாம், அப்பொழுது இந்தச் சங்கீதம் என்னும்? அப்பொழுது இச் சங்கீதமானது, புதிதாய் மகுடாபிஷேகம் செய்துகொண்ட சக்கிரவர்த்திக்கு, சத்யவந்தர்களான பிரஜைகள் பணியுங்கால் முழங்கும் வாத்ய கோஷமாகும். அன்றியும், மணநாளில் அருணோதய காலத்தில், சுகமாய் நித்திரை செய்துகொண்டிருக்கும் மணமகன் காதில் மிருதுவாய் நுழைந்து, அவனை மணப் பந்தலுக்கு அழைக்கும், மங்கள வாத்தியத்திற்குச் சமானமாகும்.—அதோ போகின்றார், புவியினிற் பிறந்த பூவியல் ஜானகியை மாலையிடப் புண்ணிய புருஷனான ஸ்ரீராமன் வில்லை யெடுத்து நாணேற்றிடப்போன காம்பீரத்துடனும், அவரைவிட அதிக காதலுடனும். நான்தான் மைதிலி, ஒரு புறமாய் நிற்கும் இப் பரிஜனங்கள், ஜானகியின் மணத்துக்கு வந்து, எப்படி முடியுமோ என்று ஏங்கி நிற்கும் அரசர்கள். — காதலா, போய், நீர் வாழ்ந்தால் நான் வாழ்வேன். அமர

புரியும உமமைவிட, பார்த்திடும நான், அதிக பய முள்ளவளா யிருக்கிறேன.

[பானுசேனன் தனக் குள்ளாகப் பெட்டிகளைப்பற்றி யோசிக்குங் காலே சங்கீதம் முழங்கப்படு கிறது.]

[திரையுள் பாட்டு]

"இச்சை யெனுமபொருளுக் கெங்ஙனே யுறபத்தி
மெச்சுமித யத்திலோ புத்தியிலோ—உச்சிதமாய
எவவாறு தான்தோன்றி யெவவாறு தானுஙகும
அவவாறதைச் சொல்சொல்லை யால்
கண்ணிலே தோன்றுமது காட்சியா லேயோங்கும
மண்ணில்தன தொட்டிலிலே மாயந்துபோம—எணணரிய
இச்சையின் சாவுமணி எல்லோரு மாடடிடநா
னுச்சரிக்க ஒஙடாங மணி."

பா. ஆகவே, வெளித்தோற்றம ஒனறுக்கும உதவாததா யிருக்க லாம. வெளி ஆபரணத்தைக கணடே உலகம ஏமாநது போகினறது எனறும. நியாயஸ்தலததில எபபடிபபட்ட கெட்ட வழக்கும எடுத்துப பேசுபவன இனிய குரலால் குறறமெல்லாம மறைக்கபபடடு குணமாயத் தோறறுகிறது! மத விஷயத்திலோ, எபபடிபபடட நிகிரிஷடமான காரியமா யிருந்தாலும, அது பூஜிதமானது எனறு புராண மெடுத் துக் கூறி, அவலட்சணததை மறைத்து அழகாயத் தோற றுமபடி வியாகயானம செயயும புண்ணியவானகளு மிருக் கிறார்கள. எபபடிபபட்ட தீய குண மாயினும வெளிக்கு நற்குணமபோல் கொளுசமாவது வேடம பூணாதது ஒனறு மில்லை. மணணினல கட்டிய மெத்தையைபபோல பலமற்ற ஹிருதயத்தை யுடைய எத்தனைப பயஙகாளிகள, பீமனை நிகர்த்த பலாட்டியாள போலவும தோறறுகிறார்கள. உள்ளே ஆராய்ந்தாலோ ஒனறன் பிடிக்கவும தைரிய மற்ற வர்கள! இவர்களெல்லாம வீரர்களைபபோல வெளி வேஷம

தரிக்கின்றனர், மற்றவர்கள் கண்டு மருண்டிட ! அழகைப் பார். ஆடையாபரணங்களின் இடையினால் அது விலைக்கு வாங்கப்படுகின்றது, என்பதைக் காண்பாய். அவைகளை அதிகமாய் அணிபவர்களின் சுபாவத்தைத், ஆச்சரியப்படும் படி முற்றிலும் மாற்றி, அதிக அழகுடையவர்கள் போல் காட்டுகின்றது. காற்றில் அசைந்து விளையாடும், கட்டழகி எனக் கருதப்படும் காரிகையின் கரு முகில்போன்ற அளக பாரம், கிட்டிப் பார்த்தால் மொட்டைத் தலையிட்டிருந்தும் ஸ்வீகாரம் வாங்கியதா யிருக்கும் பெரும்பாலும் ; அல்லது அதை உண்டுபண்ணின மண்டை மடிந்து மண்ணுயப்போ யிருக்கலாம். இவ்வாறு வெளி ஆபரணமெல்லாம் அபாயகரமான சமுத்திரத்தின் மோசகரமான கரையாகும், உள் ளிருக்கும் அசங்கியத்தை மூடும் வெளி உத்தரீயமாம். ஒரு வார்த்தையில், விவேகிகளையும் மயக்கி, வலையிற் சிக்கச்செய்ய, மேலுக்கு வாஸ்தவம்போல் வேடம் தரிக்கும் கபடமே யாம். ஆகவே ஆடம்பரத்தோடு கூடிய ஆணிப் பொன்னே, ஆன்றோர் ஓடுக் கொப்பாய மதித்த அபரஞ்சியே, நீ வேண்டா மெனக்கு. ஒருவர் கையினின்றும் ஒருவர் கைக்கு மாறிக்கொண்டிருக்கும், அற்பமாம் வெளுத்த வெள்ளியே, நீயும் வேண்டா மெனக்கு.—அழகிலா வெறுமையமே, நீஏதேனும் கொடுப்பதாக வாக்களியாது பயமுறுத்திய போதிலும், நீ ஒன்றும் கூறாமலிருத்தலே, எனக்கு அதிகமாய்க் கூறுகின்றது. உன்னையே நான் கோருகின்றேன் , எனக்கு சந்தோஷ முண்டுபண்ணுவையாக !

இதுவரையிலும் எனக் கிருந்த சந்தேகமான எண்ணங்கள், ஆயுந் தறியா நிராசை, ஒடுக்க முறும் பயம், பொறுமை முதலிய இவைகளெல்லாம் எப்படிக் காற்றாயப் பறந்தோடுகின்றன ! காதலே ! பொறுமையை வஹி ! உனது ஆநந்த பரவசத்தைத் தணித்துக்கொள் ! உன சந்தோஷத்தை அத்துமீற விடாதே, இந்த அதிகத்தை அடக்கிக்கொள் ! உன்னால் எனக் குண்டாகும் சந்தோஷம்

பொறுக்கமுடியவில்லை; அதைக் குறைத்துக்கொள், இல்லா விடின் இது எனக்குத் தெவிட்டிப்போகுமென அஞ்சு கிறேன்.

பா. என்ன காண்கின்றேனோ இங்கு நான்? [ஈயப் பெட்டியைத் திறந்து] ஒப்பு உயர்வு இல்லா சரோஜினியின் உருவமா? சிருஷ்டிக்கு ஒப்பாக அவ்வளவு அழகாய்ச் சித்திரம் எழுதிய தெய்வீகம் பொருந்தியவன் யார்? இந்தக் கண்கள் அசை கின்றனவோ? அல்லது, என் கண்களில் பிரதிபிம் பிப்பதினால், சலனப்படுவன போல் தோற்றுகின்றனவா? இதோ இவ் வதரங்கள் பிரிந்திருக்கின்றன சுகந்த சுவாசத் தினால், இத்தனை இனிய பிரிவே அத்தனை இனிய நண்பர் களைப் பிரித்திடல் வேண்டும். இவ்விடம் இவளது அளக பாரத்தைச் சித்தரித்தவன், சிலந்தியின் வலையில் ஈக்கள் சிக்குவதைவிட அதிகமாய், ஆண் மக்களுடைய ஆவி யெல்லாம் இந்த அழகிய வலைக்குட் சிக்கச்செய்ய வேண்டு மென்று, இவ்வாறு வரைந்தனன். ஆயினும் இந்தக் கண் களை எப்படி வர்ணித்தான்? இரண்டையும் வர்ணிக்கும் சக்தி அவனுக்கு எப்படிக் கிடைத்தது? ஒரு கண்ணைத் தீட்டியவுடன், அவனது இரு கண்களையும் அது வெளியே பறிக்கும் சக்தியைப் பெற்றதாகி, மற்றொரு கண்ணை எழுத அசக்தனாயிருக்குமே அவனை! ஆயினும் இப் படத்தைத் தக்கபடி மதிக்கவல்ல என் வார்த்தைகள் எவ்வளவு குறை படுகின்றனவோ, அவ்வளவு குறை படுகின்றது இப் பட மானது அதோ இருக்கும் நிஜ உருவை வர்ணிப்பதில். என் அதிர்ஷ்டத்தை திரட்டிச் சுருக்கிய சுருள் இதோ இருக் கின்றது.

" வெளியுருவைக் கண்டு மோசம் போகாதே
விரும்பியது சரியே, வேண்டு மிச்சுகம்
பெற்றதிது பெறும்பேறெனவே,
உற்று நீர் ஒன்றை, உள்ளத்தி லெண்ணீர்.
இது உமக்கு இன்பம் தருவதேல்,
இவ் வதிர்ஷ்டமதை யேசுகமெனக் கொள்வீர்

*காதலி யவளைக் கருணையாய் நோக்கி*
*ஏதமி லவளவாய் முத்தம் கொள்வீர்!"*

*இன்பமாம் சாசனம்!—கருத்தினிய மானே, உன் விருப்பத்தினபடியே! [அவளை முத்தமிட்டு] கட்டளைப்படி கொடுக்கவும் கொள்ளவும் காத்து நிற்கின்றேன். பந்தயத்தின் பொருட்டு யுத்தம் புரியும் வீர ரிருவருக்குள், ஜனங்கள் மெச்சும்படி ஜெயித்ததாக எண்ணு மொருவன், கல்லென ஒலிக்கும் கரகோஷத்தைக் கேட்டு மதி மயங்கினவனாய், அச் சந்தோஷ ஆரவாரம் தன் பொருட்டோ அல்லவோ என்று சந்தேகித்துக் கண்ணை விழித்து விழித்துப் பார்ப்பது போல், கனிவுடைக் காதலியே, நானும், காண்பது கனவோ, உண்மையோ வென உள்ளத்தில் ஐயம் கொண்டவனாய், உன் வாயால் உண்மையென ஒப்புக்கொள்ளப்பட்டு ஊர்ஜிதமடையக் காத்து நிற்கின்றேன்.*

ச. *பிராணநாதா, இதோ நிற்கின்றேன் நான். இப்பொழுது என்னை உள்ளபடி காண்கின்றீர். என்னைப்பற்றி மாத்திரம் நான் கருது வேனாயின், இப்பொழுது இருப்பதைப் பார்க்கிலும் மேம்பட்டிருக்க வேண்டுமென்று கோருவது பேராசையாகும். ஆயினும், உமக்காக இதைவிட இருபது மடங்கு மேலான ஸ்திதியில் இருக்கக் கோருவேன், அழகில் இன்னும் ஆயிரமடங்கு அதிகப்பட்டவளாயும், பணத்தில் இன்னும் பதினாயிர மடங்கு அதிகமா யுள்ளவளாயு மிருக்க விரும்புவேன். உம்மால் அதிகமாய் நன்கு மதிக்கப்படும் பொருட்டு, அழிவிலா நற்குணத்திலும், அழகிலும், அருஞ் செல்வத்திலும், ஆப்த நண்பரிலும், இன்னும் அதிகப்பட்டவளாயிருக்கவேண்டு மென்பதே என் கோரிக்கை. என்னிடத்துள்ள குணங்களை யெல்லாம் ஒருங்குசேர்த்தாலும் ஒன்றுமில்லாதவளாவேன்! விவரமாகக் கூறுமிடத்து, நான் ஒன்றுமறியாப் பேதை, ஒன்றும் கற்றவளல்ல, ஒன்று மனுபவமற்றவள். ஆனால் இந்த ஒரு நற் பாக்கிய முண்டு; இனி*

மேலு கற்கக் காலமல்ல என்கிற வயதாகவில்லை. இதைவிட மேலான பாக்கிய மொன்றுண்டு; அதாவது, கற்பித்தால் வராது என்று சொல்லும்படியாக அவ்வளவு மந்த புத்தி யுடையவளாய் வளர வில்லை. இவையெல்லாவற்றையும் விட மேலான பாக்கியமு மொன்றுண்டு, அதாவது, வணக்க முடைய என்பேதை யறிவை, நல் வழியில பயிற்றுவிக் கும்படி, எனது நாதனுகவும், நாயகனுகவும், அரசனுகவு முமமிடம ஒப்புவிக்கின்றேன். நான் உமமுடையவளாயி னேன் இட்சணமுதல். என்னுடையவெல்லாம உமமுடை யதாக மாறறபபட்டன. இதுவரையில இந்த அழகிய மாளி கைககு அரசியாயிருந்தேன், என வேலைககாரர்களுக கெல லாம எஜமானியா யிருந்தேன், நான எனக்கே சொந்தமா யிருந்தேன. இபபொழுதோ, இநத வீடும, இநத வேலைக் காரர்களும, இநதச்செல்வமும, நானும, உமமுடைய வாகி விட்டோம. பிராணநாதா, இவைகளை யெல்லாம இநத மோதிரத்துடன் உமககுக் கொடுக்கிறேன. இநத மோதி ரத்தை இழந்துவிட்டாலோ, அல்லது கழறறி விட்டாலோ, அல்லது யாருககாவது கொடுத்துவிட்டாலோ, அதை உமது காதல குன்றினதற்கு அறிகுறியாகவும, உமமை நிந்திக்க எனக்கொரு காரணமாகவும, கொளவேன.

பஸ். என அழகியே, என்னை வாயதிறந்து பேச வகையறியாதவ னுயச செயதுவிட்டாய நீ. என உடலிலுள்ள உதிரமே உரைத்திடுகின்றது எனகாதலை, பிரஜைகளைப பிரியமாய ஆண்டிடுமபடி அரசன ஒருவன, அருமையாம பிரசஙகம அழ குறச செயது முடித்ததும, சநதோஷத்தினுல சபதிதிடும ஜனஙகள ஒன்றுயப பேசும எலலாவார்த்தைகளும ஒருஙகு கூடி, அர்ததமொன்று மில்லா ஒரே கோஷமாகி, தெரி வித்தும தெரியாமலும இருக்கிற களிபபினைக குறிக்கும குழபபத்தைபபோல, என அறிவானது கலஙகி நிற்கிறது. ஆயினும இந்த மோதிரத்தை என விரலை விட்டு நீக்கினுல், உடனே எனனுயிரும என் உடலை விட்டு நீங்கும. அந்தச்

சமயம் வந்தால். பானுசேனன் பரலோகம் போய்ச் சேர்ந்து விட்டான் என்று உறுதியாய்க் கூறு.

நீ. ஐயா,—அம்மணி, நாங்களெல்லாம் இதுவரையில் எங்கள் எண்ணம் ஈடேறவேண்டுமென்று காத்திருந்ததற்கு, இப்பொழுது அப்படியே நேர்ந்தமையால், உங்களை வாழ்த்துவதற்கு இதுதான் எங்களுக்குச் சமயம். நீங்களிருவரும் நெடுநாள் காலம் சுகமாய் தம்பதிகளாக வாழ்வீர்களாக !

க. ஐயா, பானுசேனரே,— என் அம்மணி, நீங்கள் என்ன சந்தோஷத்தை யெல்லாம் விரும்புவீரோ, அந்தச் சந்தோஷத்தையெல்லாம் பெறுவீரெனக் கோருகிறேன். ஏனெனில், என்னிடமிருந்து ஒன்றையும் விரும்பமாட்டீர் என்று உறுதியாய்க் கூறுவேன். உங்களுடைய வாக்குத் தத்தத்தின்படி உங்களுக்கு விவாகத்தை முடித்திடுங்கால், எனக்கும் விவாகத்தைச் செய்துமுடிக்க வேண்டுமென்று நான் வேண்டிக் கொள்ளுகிறேன் உங்களை.

பா. மனப்பூர்த்தியாய், ஆயின் மனைவி யொருத்தியை நீயும் சம்பாதித்துக் கொள்ளல் வேண்டும்.

க. நீரே எனக்குச் சம்பாதித்துவிட்டீர். அதற்காக உமக்கொரு நமஸ்காரம் ! உமது கண்களைப்போலவே எனது கண்களும் சீக்கிரத்தில் பார்க்கும் சக்தியுள்ளன. நீர் தேவியைப் பார்த்தீர், நா னவளது தோழியைப் பார்த்தேன். நீர் காதல் கொண்டீர், நானும் காதல் கொண்டேன். தாமதம் என்பது உம்மிடத்தி லெப்படி யில்லையோ, அப்படியே என்னிடத்திலும் இல்லை. உம்முடைய அதிர்ஷ்டம் அந்தப் பெட்டிகளிடத்தில் இருந்தது, என் னதிர்ஷ்டமும் அங்கேயே இருந்தது, நடந்ததை நோக்குங்கால். ஏனெனில், இதோ நிற்கும் மங்கையுடன் என்னா லானமட்டும் கஷ்டப்பட்டு வேண்டிப் பார்த்தேன், வா யுலர்ந்து போகும்படி என் காதலைக் குறித்து எத்தனையோ சத்தியங்கள் செய்து பார்த்தேன்.

கடைசியில் இக் கட்டழகியினிடமிருந்து இந்தச் சத்தியந் தை வாங்கினேன்.—அதினின்றும் அவள் தவறாதிருப்பா ளாக!—நீர் தலைவியை உம் அதிர்ஷ்டத்தினால் ஜெயிப்பீ ராகில், நான் தோழியைப் பெறக்கூடும் என்று.

ச, இது உண்மைதானா, நிலகேசி?

நி. ஆம், அம்மா, உமது மனத்துக்கும் இது திருப்தியானால்.

பா. கிரிஜாநாதா, நீ மெய்யான உண்மையாய்ப் பேசுகிறாயா?

கி. ஆம், ஐயா, இது சத்தியமே.

பா. ஆனால் உங்கள் விவாகத்தினால் எங்கள் மண விருந்து அதிக மேன்மைப்பட்டதாகும்.

கி. ஆயினும்—யார் வருகிறது இங்கே? லீலாதரரும் அவரது ஜைன மங்கையுமா!—என்ன! வாணீபுரத்து எனது பழைய நண்பர் சோமேஸ்வரர்!

லீலாதரன், சோமேஸ்வரன் ஜலஜா வருகிறார்கள்

பா. லீலாதரரே,—சோமேஸ்வரரே, வாருங்கள், வாருங்கள். இப்பொழுதுதான் இந்த வீட்டில் எனக்குப் புதிதாய்ப் பாத்யதை உண்டாயிற்று, இதற்குள் நான் விருந்தினரை வரவு அழைத்தல் நியாயமாமோ, என்னவோ?—என் மனத்துக் கினியமானே, சுந்தரி, உமது அனுமதியினால், எனது தேசத்தாரும் எனது ஆப்த நண்பர்களுமான இவர்களுக்கு நல்வரவு கூறுகிறேன்.

ர. நானும் அவர்களை நல்வரவு அழைக்கின்றேன்; அவர்கள் இப்பொழுது வந்தது நமது பாக்கியமே.

லீ. உமக்கு நான் வந்தனம் செய்கிறேன். என் வரைக்கும், நானிங்கு வந்து உம்மைக் காண்பதாக ஏற்பாடு செய்யவில்லை. ஆயினும் வழியில் சோமேஸ்வரரைச் சந்திக்க, அவர் தங்களை இல்லையென்று சொல்லக்கூடாதபடி நிர்ப்பந்தித்து, என்னுடன் வரும்படிச் செய்தார்.

சோ. ஆம், நான் அங்ஙனந்தான் செய்தேன், அதற்கு ஒரு காரணமு மிருக்கின்றது —அநந்தநாதர் உமது க்ஷேமத்தை விசாரித்ததாகச் சொல்லச் சொன்னார்.

[ஒரு நிருபத்தை பானுசேனனிடம் கொடுக்கிறான்.]

பா. இந் நிருபத்தை நான பிரிதது வாசிக்குமுன, என் அருமை நண்பன் எப்படி யிருக்கின்றுனென்று சொல்லும்படி உமமை வேண்டுகிறேன.

சோ. மனத்தி லன்றி மறறொரு அசௌக்கிய மில்லை, மனத்திலோ சவுக்கியமென்பதில்லை. அவரது அந்நிருபம அவர் ஸ்திதியை அறிவிக்கும உமககு.

[பானுசேனன் நிருபத்தைப் படித்துப் பார்க்கிறான்.]

கி. நீலகேசி, அதோ நிற்கும அம் மங்கையுடன் வார்த்தையாடி நல் வரவு அழை—க்ஷேமமதானு, சோமேஸவரரே? வாணீபுரத்தில் எனன விசேஷம? அந்த வர்த்தகர்களுக்குட் சிமான், புண்ணிய புருஷன, அநந்தநாதர் எபபடி யிருக்கிறார்? நாஙகள வந்த காரியம கைகூடிற் றெனறு கேட்டறிய அவர் மிகவும சந்தோஷபபடுவார் என்பதை நான் அறிவேன். நாடி வந்த நிதியை நாங்கள ஜெயித்துவிட்டோம.

சோ. அவர் இழந்த நிதியை நீங்கள் ஜெயித்திருநதால் மிகவும சந்தோஷபபட் டிருபபேன !

ச. என் பிராணநாதர் படிக்கும அந் நிருபத்தில் ஏதோ விசேஷ சமாசாரம இருக்கவேண்டும ; இல்லாவிடின் அவர் முகம வெளுத்துக் காட்டுவானேன ? யாரோ ஆருயிரான நண்பன் இறந்திருக்கவேணடும ; இன்றேல், உறுதியான மனதுடைய ஒருவரது உள்ளத்தை உலகததினில் வேறொன்றும இவ்வாறு கலங்கச் செய்யாது ! ஹா ! இன்னும அவர் துக்கம அதிகரிக்கின்றதே !—பிராணநாதா ! என்னை மன்னிக்க வேணடும. உமமில் நான் பாதியாய் விட்டபடி

யால் இந் நிருபம் உமக்குக் கொண்டுவரும் விஷயத்திலும் ஆட்சேபனையின்றி பாதியை நான் பகிர்ந்துகொள்ளலாம.

பா. கணணே, சரோஜினி! உலகத்தில் எவவளவு துக்ககர மான சமாசாரம் ஒரு நிருபத்தில் எழுதக்கூடுமோ, அவ் வளவும இந் நிருபத்தில் அடங்கி யிருக்கின்றது. காதலியே என் காதலை உனக்கு நான் முதலில் வெளியிட்டபொழுது, என் செல்வமெல்லாம என் குடிப பிறபபே—நான் உத்தம குலத்தில் உதித்தவன், அவவளவே—என்று வெளிப்படை யாயக் கூறினேன். நான் அங்ஙனம கூறிய துண்மையே. ஆயினும பெண் ணரசியே, நான் ஒன்று மில்லாதவன் என்று கூறினதிலும அதிக வீமபு பேசினேன் என்பதை, இப்பொழுதறிவாய். நான் செல்வ மொன்று மில்லாதவன் என்று உன்னிடம கூறினபோதே, அம்மட் டன்று, ஒன்று மில்லாத வனினும ஹீன ஸ்திதியை யுடையவன், என்று சொல்லியிருக்கவேண்டும. என் செலவின் பொருட்டு, கடன் வாங்கி, என் ஆருயிர் நணபனுக்கு அதற்காகக் கட்டுபபட் டிருக்கிறேன, அந்த நணபனை அவனது ஜன்மத் துவே ஷிக்குக் கட்டுபபடுத்தியிருக்கிறேன. கண்ணே, இதோ இந் நிருபத்தைப் பார்! இக் கடிதத்தை என் நணபனது உடலென எண்ணுவாய். இதிலுள்ள ஒவவொரு வார்த் தையும், அவனது உடலினின்றும உயிர் நிலையான இரத்தத்தைச் சொரியும ஆழமான காயமெனக் கருதுவாய. —ஆயினும சோமேஸ்வரரே! இது உண்மைதானு? அநந்தநாதனுடைய கப்பல்கள் எல்லாம் அழிந்துபோயி னவா? திரிபுரம, மலையாளம், சிஙகளம், தூத்துக்குடி, வங்காளம, குர்ஜரம முதலிய இடங்களுக் கெல்லாம சென்ற கப்பல்களில், ஒன்றுவது திருமபி வரவில்லையா? கப்பல்களை யழிக்கும் கற் பாறைகளில் தாக்காது ஒனறுவது தப்பி வர வில்லையா?

சோ. ஒன்றும் தப்ப வில்லை! அன்றியும, இப்பொழுது அக் கடனைத் தீர்க்கக் கையில் ரொக்கப் புண மிருந்தாலும், அந்த

மாறுபாடி அதை வாங்கிக்கொள்ளமாட்டேன் என்கிறுனம. ஒரு மனுஷ்யனை அடியுடன் அழிக்க வேண்டுமென்று பேராசை கொண்டிருக்கும அவனைபபோன்ற மனுஷ்ய உருவம படைத்த ஒரு பிராணியை, அவனியில் எங்கும கண்டதில்லை நான். காலையும மாலையும அரசனிடம போய்க காத்திருந்து நிரபபந்திக்கினறுன. தனக்கு நியாயபபடி தீர்மானிக்காவிட்டால் அநியாய ராஜ்யமெனறு முறையிடுகினறுன ; பெரிய வர்த்தகர்கள இருபது பெயர், உயர்ந்த பதவியிலிருக்கும மந்திரி முதலானோர், அரசன, எல்லோரும் அவனைச் சமாதானபபடுத்திப பார்த்தார்கள. தன் பத்திரத்தினபடி நியாயம நடத்தி அபராதத்தைப பெறவேண்டுமென்னும குரூரமான பிடிவாதத்தினினறும அவனைத் திருபப, ஒருவராலும முடியாமற போயிறறு.

ஜ. தனனுடைய பந்துக்க ளாகிய தூபலாவிடமும, சேஷலாவிடமும, அநநதநாதரிடமிருந்து தனக்குச் சேரவேணடிய தொகையை இருபது மடஙகு அதிகமாகப பெறுவதைப் பார்க்கிலும, அவருடைய சதைதையையே பெறுவேன எனறு சத்தியம செயததை, அவருட னிருந்தபொழுது நான கேட்டிருககினறேன. அன்றியும, ஐயா, அதிகாரிகள் நியாய சட்டத்தைக் கொணடு அவரை அடக்காவிட்டால், அநந்தநாதர் பாடு கஷடமாய்த்தான் முடியும் எனபதை நான அறிவேன்.

ச. இவவாறு ஆபத்தில் அகப்பட்டிருபபவர் உமது ஆப்தரான நண்பரா ?

பா. அவனைவிட ஆப்தன் அவனியில் எனக்கு வேறொருவரில்லை. இணை யிலாக் கருணையுடையவன, அண்டினவரை ஆதரிப்பதில் அத்தனை அன்பன், உதவி புரிவதில் ஒருகாலும தளராத தயாள குண முடையவன ; இவ்வுலகில் உயிர் வாழும வேறெம் மனிதனைவிட அவனிடம் பூர்வீகமான தண்ணளியானது அதிகமாய்க் குடிகொண்டிருக்கிறது.

ச. அந்த மாறுபாடிக்கு அவர் கொடுக்கவேண்டிய தொகை எவ்வளவு?

பா. என்பொருட்டு, மூவாயிரம் பொன்.

ச. என்ன! இவ்வளவுதானா? அவனுக்கு ஆறாயிரம் பொன் கொடுத்து அந்தப் பத்திரத்தைக் கிழித் தெறியும். உம்முடைய தவறினால் இப்படிப்பட்ட உத்தமனான நண்பனது கேசத்தி லொன்று கெடுமுன, அந்தத் தொகைக்கு இரட்டிப்பாய பன்னீராயிரம் பொன் கொடும்; அதுவும் போதா மற் போனால், அதற்கு மும்மடங்கு கொடும். முதலில், இன்றைத் தினமே நமது கலியாணச் சடங்கை முடித்துவிடும். உடனே உமது நண்பரிடம் வாணீபுரம் போய்ச் சேரும். உமது மனத்தில் இக்குறையை வைத்துக்கொண்டு நீர் என் பக்கத்தில் இருப்பது எனக் கிஷ்டமில்லை. இச்சிறு கடனை இருபது மடங்கு அடைக்கத் தக்க பொன்னை உமக்குத் தருகிறேன். அதைக் கொண்டுபோய் அக்கடனை யடைத்தபின், உமது ஆபத்தரை அழைத்து வாரும்; இங்கு என் தோழி நீலகேசியும் நானும், அதுவரையில் கன்னிகைகளாகக் காலம் கழிக்கின்றோம். வாரும் விரைவில்; நமது விவாகம் முடிந்தவுடன் நீர் புறப்படவேண்டும். உமது நண்பரை யெல்லாம் அழையும் நமது மணத்திற்கு; உற்சாகத்துடனிரும். கஷ்டத்தினால் உம்மைப் பெற்றமையால், காதலும்மீது அதிகம் கொண்டிருக்கிறேன். முதலில் உமது சிநேகிதர் என்ன எழுதியிருக்கின்றார் கேட்போம்.

பா. [படிக்கிறான்.] "என்னினிய நண்பனே! பானுசேனா! என் மரக்கலங்களெல்லாம் மாண்டுபோயின! என் கடன்காரர்கள் எல்லாம் நிர்ப்பந்திக்கின்றார்கள். என் கையில் சொத்தில்லை. மாறுபாடிக்கு நான் எழுதிக் கொடுத்த பத்திரம் தவணை கடந்துபோய்விட்டது. அதில் குறித்த அபராதத்தைக் கொடுத்து நான் உயிர் வாழ்வது அசாத்திய மாகையால், என்னுயிர் போகுமுன், உன்னை ஒரு முறை காணவே

ஞயின், என் கடனையெல்லாம் எனக்குத் தீர்த்தவ ஞவாய ! ஆயினும, உனக்கெப்படி சவுகர்யமோ அபபடிச்செய். உன னுடைய அனபானது இஙகு வருமபடி உனனை உநதாவிட டால், எனனுடைய நிருபமானது அவ்வாறு செயய வேணடியதில்லை. ''

ச. பிராணநாதா, சீக்கிரம எல்லா வேலையையும முடித்துக் கொணடு போகப புறபபடும.

பா. போயவருமபடி நீயே உத்தரவளிபபதினுல், நான் உடனே புறபபடுகினறேன. நான் மீண்டு வருமளவும அரைக் கண முமம அவவிடம அதிகமாகத் தாமதியேன. காதலியே, மீட டும உனனைக காணுமளவும கண்ணுறஙகேன்.

[எல்லோரும் போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.

---

## மூன்றும் காட்சி

இடம்—வாணீபுரம். ஓர் வீதி.

ஷாமலால், சாம்பநாதன், சிறைச்சாலைச் சேவகன் வருகிருன்.

ஷா. காவறகாரா ! ஜாக்கிரதையாகப பார்த்துக்கொள் இவனை. பச்சாததாபத்தைபபறறி எனனிடம் பேசவேண்டாம— பணத்தை வட்டியில்லாமல் கொடுத்த மூடன் இவன்— காவறகாரா ! ஜாக்கிரதையாகப பார்த்துக்கொள் இவனை.

அ. அபபா, ஷாமலால் நான் சொலவதைச் சற்றே கேள்.

ஷா. நான் என் பத்திரத்தின்படி நடத்துவேன். என் பத்திரத் திற்கு விரோதமாக ஒனறும பேசாதே ! பத்திரபபடி நிறை வேறறுவதாக நான சத்தியம செய்திருக்கிறேன். ஒரு கார ணமு மில்லாதிருககுமபொழுது எனனை நாயென்றழைத்தா யல்லவா ? ஆகவே, நான் நாயானபடியால், என்பறகளுக்குப

பயபபடு. இராஜா இருக்கின்ருா எனக்கு நியாயம நடத்த. —என்ன பயித்தியக்காரனுய இருக்கிருய் நீ, காவறகாரா! அவன கேட்டானென்று, அவனை எப்படி வெளியில் அழைத்துக் கொண்டு புத்தியிலலாத்தனமாய் வருகின்ருய? எனக்கு ஆச்சரியமா யிருக்கின்றது.

அ. உன்னை வேணடிக்கொளகிறேன, நான சொல்வதைசசற்று கேள்.

ஷா. நான என் பத்திரத்தினபடி நடத்துவேன, நீ சொலவதை ஒன்றும நான கேட்கமாட்டேன. நான என பததிரத்தின் படி நிறைவேற்றுவேன. ஆகையால் நீ பேசுவதிற பிரயோசன மில்லை. ஹிந்துககள வந்து வேணடுகிருர்களே என்று, தலை யசைத்து, என் மனமிளகி, பெருமூச் செறிந்து, மதி மயஙகி, பச்சாத்தாபபபட்டு, உள மிரங்கும மந்த புததியை யுடைய மடையனல்ல நான்.—பின் தொடராதே!—உன் பேசசு வேணடாமெனக்கு! என பத்திரத்தின்படியே நான நிறைவேற்றுவேன. [போகிருன்.]

சா. மனிதர்களுடன சகவாசம செய்யும இத்தனைப பிடிவாத முள்ள நாயை இதுவரையில் நான கண்டதில்லை.

அ. அவன் போகட்டும. வீணுக நான இனி அவனைப பின தொடர்ந்து வேணடமாட்டேன. அவன் வேண்டுவது என னுயிர்போலும்; அதற்கு நியாயமும எனக்கு நன்ருயத் தெரியும. அவனுக்குக் கடன்பட்டு அவன் கையிற் சிக்கிய அநேகரை, அவர்கள் என்னிடம வந்து துக்கப்பட்ட பொழுது, நான் மீட்டிருக்கினறேன்; ஆகவே என்னைத் துவேஷிக்கிருன் அவன்.

சா. இந்த அபராதத்தின்படி நடப்பதற்கு அரசர் ஒருகாலும் உடன்படார் என்று உறுதியாய் நமபுகிறேன்.

அ. நியாத்திற்கு விரோதமாய நடக்க முடியாது. இந்த வாணீபுரம் வையகத்தி லுள்ள நானு ஜாதி வர்த்தகர்களும்

வந்து சேருமிடம, அதனுல் நமது பட்டணம் பெருமலாபத்தை அடைகிறது ; ஆகவே நியாய சட்டப்படி நடத்தாவிட்டால், ராஜயத்திற்கு அதனுல் பெரும அவதூறு உண்டாகும். ஆகவே நீர் விடை பெற்றுப் போம. இந்த நஷ்டங்களும துயரமும என்னுடலே மிகவும மெலியச் செய்திருக்கின்றன; இந்தக் கொடியனுை மாறுபாடிக்கு நான் என்னுடலிலிருந்து நாளை ஒரு ராத்தல் மாமிசம கொடுக்கமுடியுமோ என்று சந்தேகபபடுகிறேன்.—நட, அபபா காவற்காரா, நட,—ஈசனருளால் அவன் கடனை நான் தீர்ப்பதை பானுசேனன் வந்து பார்த்தாற் போது மெனக்கு! அப்புறம எனக் கொன்றும் கவலே யில்லே. [போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.

---

## நான்காம் காட்சி

இடம்...மணிபுரம். சரோஜினியின் வீட்டில் ஓர் அறை.

சரோஜினி, நீலகேசி, லீலாதரன், ஜலஜா,
பாலதாசன் வருகிருர்கள்,

லீ. அமமணி, நான அதை உமமெதிரில் எடுத்துரைப்ப தாயினும நீர் மேனமையாம தெய்வீகமான நட்பின் திறத்தை உண்மையாய அறிந்துடையீர் என்று நான் கூறவேண்டும; உமது பிராணநாதன உமமை விட்டுப பிரிந்திருப்பதை நீர் பொறுத்திருப்பதில், அது நன்ருய விளஙகுகின்றது. ஆயினும, இந்தப் பெருமையை யாருக்காகக் காட்டுகிறீர் என பதையும, எப்படிப்பட்ட உத்தம புருஷனுக்கு நீர் உதவுகிறீர் என்பதையும், உமது கணவனுக்கு அவர் எவவளவு ஆப்த நண்பன் என்பதையும், நீர் அறிவீராயின், உமக்கு வழக்கமாம் உதாரத்திருல் உண்டாகும சந்துஷ்டியைவிட, இவ் வேலேயில் அதிக சந்துஷ்டி யுடையவராவீர் என்பதை நான் அறிவேன்.

ச. பிறருக்கு நன்மை செய்த விஷயத்தில், பிறகு நான எப்பொழுதும துக்கபபட்டே னில்லை, இபபொழுதும துக்கப்படப் போகிறதில்லை ஒனருயச் சமபாஷித்து ஒன்ருய்க் காலம் கழிக்கும அன்பு சமமாய ஒருவர்மீதொரு வர் வைத்த சினேகிதர்களுக்குள், சாயலிலும நடை யுடை பாவனைகளிலும, நறகுணத்திலும சமத்வம இருக்க வேண்டும; ஆகவே இந்த அநநதநாதர் எனபவா, எனது பிராணநாதருடைய அத்யந்த நண்பரா யிருபபதால், எனது பிராணநாதரைப் போலவே யிருக்கவேண்டு மென்று நான எண்ணவேண்டியிருக்கிறது. அங்ஙனம இருக்கு மாயின, என் உயிருக்குச் சமானமானவரை, நரகத்தின குரூரத் தினின்றும் மீட்க, நான செயயும காரியமெல்லாம எவவளவு அற்பமானது! இது சறறேறக்குறைய என்னையே நான புகழந்துகொள்வதாகும; ஆகவே இனிவேண்டாம் அதைப பற்றி. வேறு விஷயங்களைக் கேளும லீலாதரரே, என னுடைய நாதன் திரும்பிவருமளவும, என் வீட்டின் காரியங் களையெல்லாம உமது கையில ஒப்புவிக்கின்றேன; அவை களை யெல்லாம நீர் எஜமானனுயப் பார்த்து வாரும. என் வரையில், நீலகேசி ஒருத்தியை எனக்குத் துணையாகக் கொண்டு அவளது புருஷனும எனது நாதனும திரும்பி வருகிறவரையில், ஜகதீசனைக் குறித்துப பூஜை செயது விரதமாய் இருக்கவேண்டுமென்று, சுவாமிக்கு ஒரு பிரார்த் தனை செயதுகொணடேன் இரகசியமாய. இதறகு இரண்டு காத தூரத்தில் ஒருமடம இருககிறது. அஙகு போய நாங்கள தங்கியிருக்கிறேம. எனது அனபினுலும, தறகால அவசியத்தினுலும், நான உமமீது சுமத்தும இவவேலையை நீர் மறுக்கலாகாதெனை வேணடுகிறேன நான.

லீ. அம்மணி, நியாயப்படி நீர் எனக்கிடும கட்டளைகளை யெல் லாம் நான் நிறைவேற்றுவேன, மனப பூர்வமாய்.

ச. எனது பரிஜனஙகள் எல்லாம் இவ் விஷயத்தில் என் எண் ணத்தை அறிவார்கள் முன்பே. ஆகவே எனது பிராண நாதருக்கும் எனக்கும் பதிலாக, உம்மையும் ஜலஜாவையும

எஜமானனும் எஜமானியுமாக ஏற்றுக்கொள்வார்கள். ஆகவே நாம் மறுபடியும் சந்திக்கும் வரையில் சுகமாய் இருந்து இருப்பீராக.

வீ. நீங்கள் உமது காலத்தைச் சந்தோஷமாய்க் கழித்து சுகமாய் வாழ்வீராக!

ஐ. அம்மணி, உமது மனோபீஷ்டம் நிறைவேறுமாக என்று நான் பிரார்த்திக்கின்றேன்.

ச. அந்தப் பிரார்த்தனைக்காக உனக்கு வந்தனம் செய்கிறேன். அவ்வாறே, உனது மனோபீஷ்டமும் நிறைவேறுமாக என்று நான் கோருகிறேன். ஜலஜா, நான் போய்வருகிறேன்.

[வீலாதரனும், ஜலஜாவும் போகிறார்கள்.]

பிறகு, பாலதாசா,—இதுவரையில் உன்னை யோக்யனாகவும் உண்மை யுடையவனாகவும் கண்டேன், இனிமேலும் அங்ஙனமே காணுவேனாக. இந்த நிருபத்தைக்கொண்டு, மனிதனால் எவ்வளவு வேகமாய்ப் போகமுடியுமோ, அவ்வளவு வேகமாய், மதுரா நகரம் போய்ச் சேர். என்னுடைய தாயாதி பல்லவராயரிடம், அவரது கையில், நேராக இதைச் சேர்ப்பாயாக; அன்றியும், அவர் உனக்குக் கொடுக்கும் உடைகளையும், காகிதங்களையும், மனோ வேகமாய், வாணிபுரம் போகும் பொதுத் துறை யருகில், கவனமாய் என்னிடம் கொண்டு வந்து சேர்.—வார்த்தை யாடுவதில் காலத்தைப் போக்காதே, உடனே புறப்பட்டுப் போ; உனக்குமுன் அங்கு வந்திருப்பேன நான்.

பால. அம்மணி, நான் கூடிய சீக்கிரத்திற் போகிறேன். [போகிறான்]

ச. வா, நீலகேசி; நான் இப்பொழுது செய்யவேண்டிய வேலை இருக்கின்றது; அது இன்னதென்று உனக்கு இன்னும் தெரியாது. அவர்கள் நம்மைப்பற்றி நினைக்குமுன், நமது கணவர்களை நாம் காண்போம்.

நீ, அவர்கள் நம்மைப் பார்ப்பார்களா?

ச. பார்ப்பார்கள், நீலகேசி; ஆயினும் நமமிடத்தில்லாததை நாம் உடையவர்களென்று அவர்கள் எண்ணும்படியான உடையில் நமமைக் காணபார்கள்; நாமிருவரும் இரண்டு வாலிபர்களைப் போல் வேடம் தரித்திடுங்கால், உன்னைவிட அதிக அழகுடை இளைஞனய்க் காணபேன், உனனைவிட அதிக தைரியத்துடன எனது உடைவாளைத் தரிபபேன, என்று என்ன பந்தயம வேண்டுமென்ருலும கட்டுகிறேன் நான்; பாலப் பருவம போய் யௌவனம வருமுன் இருக்கும கீச்சுக் குரலுடன் பேசுவேன், மெல்லிய நடையை ஆடவர்க்குரிய கமபீர நடையாக்கிடுவேன்; சச்சரவுகளைக் குறித்து டம்பனும் வாலிபனைப்போல் வார்த்தை யாடுவேன்; உத்தமிகளான காரிகைகள் என காதலைப பெறவேணடினர்க ளென்றும, நான் அவர்களை வெறுக்க, வெயதுயிர்த்து ஆவியை விட்டனரென்றும, விசித்திரமான பொயகளை விளம்பிடுவேன்; அதைத் தடுக்க என்னல் முடியாமற போயிற் றெனபேன்; பிறகு நான பச்சாத்தாபபபட்டு அவாகளைக் கொல்லா திருக்கலாகாதா எனக் கோரியதாகக் கூறுவேன்; இமமாதிரியான இருபது பொயகளைப பேசி, ஒரு வருஷத்துக்கு முன்பாகவே, நான் பளளிககூடத்தை விட்டிருக்கவேண்டுமென்று மனிதாகள் சத்தியம செயயுமபடிச் செயவேன. டமபம பேசும காளைகளின விகடஙகள ஆயிரம் என மனததி லிருக்கின்றன, அவைகளையெல்லாம நடததிக் காட்டுவேன.

நீ. ஏன, நாம ஆடவர்களாய மாறிடுவோமா?

ச. சீ! இதென்ன கேளவி? என்ன அசஙகியமான அர்த்தம செயகிருய்? அதிருக்கட்டும; போவோம வா, நமக்காகத் தோட்டத்தின வாயிலில் காத்திருக்கும வண்டியில் நாமேறியதும், எனது சூழச்சியை முழுவதும உனக்குத் தெரிவிக்கின்றேன்; ஆகவே துரிதபபடு, இன்றைத்தினமே ஆறு காதம் செல்லவேண்டும நாம். [போகிருர்கள்.]

காட்சி முடிகிறது

## ஐந்தாம் காட்சி.

இடம்—வாணிபுரம், ஒரு தோட்டம்.

லாவண்யனும், ஜலஜாவும் வருகிறார்கள்.

லா. ஆம, உண்மையில்—இதோ பாருங்கள, தாய தந்தைகள் செய்யும பாபமெல்லாம அவர்கள குழந்தைகளின் தலையின் பேரில்தான். ஆகவே உண்மையைக் கூறுமிடத்து, உங் களைக் கண்டால், எனக்குப பயமா யிருக்கிறது. நான உஙக ளிடத்தில் எபபொழுதும ஒன்றையும ஒளித்த தில்லை; ஆகவே, இவ விஷயத்தில் எனக் கிருக்கும பயத்தை உமக் குத் தெரிவிக்கிறேன; ஆகவே சந்தோஷமா யிரும; ஏனெ னில வாஸ்தவமாய நீஙகள நரகம போகவேண்டியதுதான். அதிலிருநது தபப ஒரு கோரிக்கை யிருக்கிறது, அதுவும சரியான கோரிக்கை யல்ல, பாவமான கோரிக்கை.

ஜ. அதென்ன கோரிக்கை யபபா, சொல்; உனனை வேண்டு கிறேன.

லா. உமமுடைய தகபபனுருக்கு நீர பிறக்கவில்லையென்று கொளு சம கோரலாம—அதாவது, நீர் ஜைனன மகளல்ல வென்று.

ஜ. அதுவும ஒருவிதத்தில் பாபமான கோரிக்கையாம; ஏனெ னில் அபபொழுது என தாயார் செயத பாபமானது என தலையில் வந்து விடியுமன்றோ?

லா. ஆயின் உண்மையில் உமது தந்தை தாயர் இருவராலும நீர் சபிக்கபபட் டிருக்கிறீரென அஞசுகிறேன்; தாயாருடைய பாபத்தினின்றும தபபினுல், தகப்பனுருடைய பாபத்தில் விழுகிறீர், தகபபனுருடைய பாபத்தினின்றும தப்பினுல், தாயாரின் பாபத்தில் வீழுகிறீர். ஆகவே இரண்டு விதத் திலும நீர் நரகத்திறகுப் போகவேண்டியதுதான்.

ஜ. அந் நரகத்தினின்றும என் கணவர் என்னைக் காப்பற்று வார்; அவர்தான என்னை ஹிந்து வாக்கிவிட்டாரே.

லா. உண்மையில், அவ ரிழைத்த பாபம் எல்லாவற்றையும் விட அதிகமாம. ஒருவனைக் கொன்று மற்றொருவன் வாழும்படியான ஸ்திதியில், இவ் வுலகில் எத்தனை ஹிந்துக்கள் உயிர் வாழ முடியுமோ, அத்தனை பெயர் முன்பே யிருந்தோம. இப்பொழுது சமணர்களை யெல்லாம ஹிந்துக்க ளாக்கிவிட்டால், மாமசத்தின் விலை அதிகப்பட்டுப் போம. நாம எல்லோரும் மாமிசம தின்பவர்களாக மாறிவிட்டால், அதிக பணம் கொடுத்தாலும அனலில் வதக்க அத்தனை மாமசமும அகப்படாது.

ஜ. இதோ, லாவண்யா. என பிராணநாதரிடம நீ கூறுவதைச் சொல்கிறேன. இதோ வருகிறார் அவா.

லீலாதரன் வருகிறான்.

லீ. லாவண்யா, நீ இவவாறு எனது மனைவியுடன மூலைகளில் இரகசியம் பேசிக்கொண் டிருப்பாயாயின் நான உனமீது பொறாமை கொள்வேன சீக்கிரத்தில்.

ஜ. பிராணநாதா, எங்களைபபற்றித் தாஙகள பயப்படவேண்டாம்; லாவண்யனும நானும சண்டைபோட்டுக்கொண்டிருந்தோம. நான் சமணனுடைய பெண்ணாயப் பிறநததினால், எனக்கு மோட்சம் கிடைக்காதென்று உறுதியாயக் கூறுகிறான்; நீர் மகாராஜாவுக்குத் தக்க பிரஜையல்லவென்றும கூறுகிறான்; ஏனெனில் சமணர்களை யெல்லாம் ஹிந்துக்களாக மாறச் செய்வதினால், மாம்சத்தின் விலையை உயர்த்தி விடுகின்றீராம்.

லீ. அநத அபராதத்திற்கு நான் தக்க நியாயம் சொல்லிக் கொள்ளுகிறேன் மகாராஜாவிடம.—லாவண்யா, நேற்றிரவு அந்த சமணப் பெண்ணுடன் பேசிக்கொண்டிருந்தாயே நீ, அது என்ன சமாசாரம்? அதற்கு யார் உத்தரம்சொல்வது?

லா. அந்தப் பெண் என்னை தன் மதத்தில் சேர்த்துக்கொளளப் பார்த்தாள். அதற்கு நான் என் மதமே நல்ல மதம், நீசொல்வது சம்மத மல்ல என்று சொல்லிவிட்டேன.

லீ. மடையர்களாலும் பதங்களை மாற்றிப்பேச எவ்வளவு முடிகிறது! சீக்கிரத்தில் அறிவிற்குச் சிறந்த அழகு மௌனமாயிருத்தலாய் முடியுமென்றும், வார்த்தையாடல் கிளிப்பிள்ளைகளிடம மாத்திரம மெச்சப்படுமென்றும், நினைக்கின்றேன் — அதிருக்கட்டும அடா, 'உள்ளே போய் போஜனம ஆய்விட்டதா என்று விசாரி.

லா. இன்னும ஆய்விட வில்லை. அபபடியே இருக்கிறது, ஒருவரும சாப்பிடவில்லை இன்னும.

லீ. ஈசனே! என்ன படுங்காளிப பயல் இவன்! வேலைக்காரர்களை சாப்பாட்டுக்குச் சித்தமா யிருக்கின்றார்களா என்று விசாரி.

லா. காலைமுதல் சித்தமா யிருக்கிறார்கள்! இப்பொழுது விட்டால் அல்லவோ தெரியும், அரை க்ஷணத்தில் தீர்த்துவிடுவார்கள!

லீ. என்னடா கஷ்டமா யிருக்கிறது! போஜனத்துக்கு நாங்கள் வரலாமா என்று கேட்டுவா.

லா. அதை அவர்களைக் கேட்பானேன்? உங்களுக்கல்லவா தெரிய வேணும், உங்களுக்குப பசிக்கிறதா இல்லையா என்று?

லீ. சந்தர்ப்பம் கிடைக்கும்பொழு தெல்லாம் சச்சரவுதானா! ஒரே விசையில் உன் புத்தியின் குவியலை யெல்லாம் கொட்டி அளக்கமாட்டாயா? நான் ஸ்பஷ்டமாய்ச் சொல்வதை நீ அறிந்துகொளளமாட்டாயா? உள்ளே வேலைக்காரர்களிடம போய், உடனே இடம செய்து, இலையைப் போட்டு, உணவைப் பரிமாறச் செய்.

லா. இதோ உளளே போகிறேன்! உடனே இடம் செய்யச் சொல்கிறேன்! இலையைப்போடச் சொல்கிறேன்! சாப்பாட்டைப் பரிமாறச் சொல்கிறேன்—நீங்கள் வரும்போது மூனறு சாமான்களைக் கொண்டு வாருங்கள் ஒவ்வொருவரும் — ஒரு வாய், ஒரு கை, ஒரு வயிறு. [போகிறான்.]

ஸீ. என்ன புத்தி கூர்மை! அவனது வார்த்தைகள என்ன பொருந்தினவா யிருக்கின்றன! இவன் தன் மனமெனும களஞ்சியத்தில் எத்தனை வார்த்தைகள் சேகரித்து வைத் திருக்கிறான்! இவனைப பார்க்கிலும உயர்ந்த பதவியி லிருந் தும, இவனைபபோல் அநேகம வார்த்தைகள அறிந்தவாக ளாயினும, கடினமான பதமொன்றைத் தக்கபடிஉபயோகிகக அறியாதவர்களாய், அர்த்தத்தை அழித்திடும, அநேகரை நான அறிந்துள்ளேன—ஜெஸிகா, நீ எனனவா யிருக்கின றாய்? அபபுறம், என் இனிய கணணே, உன்னுடைய உண் மையான எணணத்தைக் கூறு, பானுசேனருடைய மனை வியைபபறறி என்ன நினைக்கினறாய?

ஜெ. அவாகளது அருங் குணமானது உரைககறபால் தல்ல, பானுசேனர் யோக்யமான வாழ்க்கை யுடையவரா யிருத்தல அவசியம! இபபடிபபட்ட குணவதியை மனைவியாகபபெறற புண்ணியத்தினால், இவ வுலகினகணணே மேலுலகத்தின ஆனநதத்தை அனுபவிக்கின்றார்; அவவாறு இவவுலகில அதை அவர் அறியாவிட்டால், அவர் நியாயபபடி சுவாக்கம ஏகத் தக்கவ ரல்ல, தெயவலோக வாசிகள இருவா, பூமண டலத்திலுள்ள புண்ணியவதிகள இருவரைப பநதயமாக வைத்து விளையாடினால், அவர்களுள ஒருத்தி சரோஜினி யாவாள, மறறொருத்தியுடன மற்றும செல்வத்தைச சேர்த் தால்தான, இவளுக்குச் சமமாகுவாள; ஏனெனில இநத அதிர்ஷ்ட ஹீனமுடைய அவனியில், அவளுக் கிணையே கிடையாது.

ஸீ. பானுசேனருக்கு எபபடி அவள் மனைவியாக வாய்த் தனளோ, அவவணணமே நான உனக்குப புருஷனாகக் கிடைத்திருக்கிறேன்.

ஜெ. அன்று; அதைபபற்றியும என எணணத்தைக் கேட்கின றீரா?

ஸீ. பிறகு கேட்கினறேன் நான, முன்பு போஜனம கொள்ள உள்ளே போவோம.

ஜ. அப்படியல்ல; நான பசியுடனிருக்கும்பொழுதே உமது குணங்களைப புகழுகின்றேனே.

லீ. வேண்டாம, உன்னை வேண்டுகிறேன், விருந்தான பின்பு அந்தப பேச்சை வைத்துக்கொள்வோம. அப்பொழுது நீ எதைச் சொன்னபோதிலும எல்லாவற்றையும ஜீர்ணித்து விடுவேன.

ஜ. சரி! ஆனல் வாரும, வர்ணிக்கிறேன் உமமை.

[போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.

---

# நான்காம் அங்கம்

## முதற் காட்சி

இடம்—வாணிபுரம். நியாயஸ்தலம்.

வாணிபுரத் தரசன், மந்திரிகள் முதலானேருடனும்
அநந்தநாதன், பானுசேனன், கிரிஜாநாதன், சோமேஸ்வரன்
சாம்பநாதன் முதலானேருடனும் வருகிருர்

வா. அ. எங்கே, அநந்தநாதர் இங்கு வந்திருக்கின்ருரா

அ. சித்தம், மகாராஜா, தங்கள் தயவை எதிர்பார்க்கின்றேன்.

வா. அ. ஐயா, உமது விஷயத்தில் எனக்கு மிகவும் வருத்தமாயிருக கின்றது. நீர் இபபொழுது கருங் கல்லினும கடினமான சித்த முடைய, பச்சாதாபமென்பதைக் கனவிலும கருதாத, கருணை யென்பது நெஞ்சில் கடுகு அளவும் இல்லாத, காதகன் கையிற்பட்டு, அவனுக்கு உத்தரவு சொல்ல வேண்டி வந்திருக்கின்றது என்பதை அறிவீரல்லவா?

அ. அவனது கடூரமான மார்க்கத்தினின்றும் அவனைச் சாந்தப படுத்தி, அவன் மனத்தை திருப்பும்பொருட்டு, மஹாராஜா

அவர்கள் மிகுந்த கஷ்டம் எடுத்துக்கொண்டதாகக் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆயினும் அவனோ ஒரே பிடிவாதமாயிருக்கின்றான்; அவனது மாச்சரியத்தினின்றும் என்னை மீட்டுக்கொள்ள நியாய மார்க்கம் ஒன்றும் காணோம்; ஆகவே, அவனது ஆக்ரிஷத்தையெல்லாம நான் பொறுக்க வேண்டியதுதான்; அவனது கொடுமையையும கோபத்தையும் சாந்தத்துடன் சகித்துக்கொள்ளச் சித்தமாக யிருக்கின்றேன்.

வா.அ. ஒருவன் போய் அந்தச் சமணனை அழைத்து வாருங்கள் சபைக்கு.

சோ. வாயிலண்டை காத்திருக்கிறான்.—இதோ வருகிறான், அரசே.

ஷாம்லால் வருகிறான்.

வா.அ. வழி விடுங்கள்; நமது சமூகத்திற்கு நேராக வந்து நிற்கட்டுமவன். ஷாமலால், கடைசி நிமிஷம்வரையில் இவவாறு தீய குண முடையவன்போ லிருந்து, முடிவில் இப்பொழுது உன்னிடம் மேலுக்குத் தோன்றும் ஆச்சரியகரமான கடூர குணத்திலும், அதிக ஆச்சரியமான ஜீவகாருண்யத்தையும் பச்சாத்தாபத்தையும் காட்டபபோகிறு யென்று நானும் நினைக்கின்றேன், மற் றெல்லோரும அப்படியே நினைக்கின்றனர். அன்றியும் இப்பொழுது நீ கட்டாயமாய்க் கேட்கும் இந்தச் செல்வமிழந்த வர்த்தகனுடைய உடம்பில் ஒரு ராத்தல் மாம்சமாகிய அபராதத்தை, க்ஷமிப்பதுமன்றி, பச்சாத்தாப மென்பதைக் கொஞ்சமேனும் பாராட்டத் தேர்ந்திலாத பிடிவாதமுடைய பரதகரான பாமரர்களுடைய கல்லினும் கடின மனத்தையும், இரும்பை யொத்த ஹிருதயத்தையும் இளகச்செய்து கருணைகூறும்படிச்செய்யத்தக்க,ஒன்றின்மே லொன்றுய்த் தாளமுடியாதபடி தற்காலம் இவருக்கு நேர்ந் திருக்கிற, கோடீஸ்வரனை வர்த்தகனையும் குன்றச்செய்யும நஷ்டங்களை, பரிவுடைக் கண்களாற் கண்டு, ஜீவ தயை மிகுந்தவனுய், அன்புகூர்ந்து, அவர் கொடுக்கவேண்டிய அசலி

லேயே அரைப் பங்கு தள்ளிக் கொடுப்பாய் என்றும், நினைக்கின்றோம். உனது பரிவுடைய பதிலை எதிர்பார்க்கின்றோம் நாங்கள் எல்லோரும்.

ஷா. என்னுடைய எண்ணத்தை முன்பே சந்நிதானத்திற்கு அறிவித்திருக்கின்றேன். என்னுடைய மதத்தின்மீது ஆணையிட்டு, எப்படியாவது என் பத்திரத்தின்படி எனக்குச் சேர வேண்டிய அபராதத்தைப் பெறுவேன், என்று சத்தியம் செய்திருக்கிறேன். அதைக் கொடுக்கமாட்டேன் என்று நீர் கூறிவிட்டால், அந்தப் பழி உமது செங்கோலையும், ராஜ்யத்தையும் சேரட்டும். மூவாயிரம் பொன்னைப் பெறாது புலால் வீசும் புன்மையான சிறிது மாம்சத்தை ஏன் இச்சிக்கின்றேன் என்று நீர் கேட்பீர்; அதற்கு நான் காரணம் கூறமாட்டேன். அது என் இஷ்டம் என்பேன். போதுமோ பதில்? என் வீட்டில் ஒரு எலி உபத்திரவம் செய்ய, அதை அழிப்பவனுக்குப் பதினாயிரம் பொன் தர நான், இச்சை கொண்டால், அதற் கென் சொல்வீர்?—என்ன? உமது கேள்விக்குப் பதில் போதுமா? சில மனிதர்களுக்கு, வாயைத் திறந்துகொண் டிருக்கும் வராகத்தைப் பார்க்க வெறுப்புண்டாகும்; சிலருக்கு, குலைக்கும் நாயைக் கண்டால், கோபம் அதிகமாய் மூளும; சிலருக்கு, துருத்தியைப் பிடித்து ஒருவன் ஊதினால், துடப்பத்தை எடுத்து அடிக்கலாமா என்று தோற்றும். பிரீதியானது நமது குணாகுணங்களுக்கு எஜமானாகி, தன் விருப்பு வெறுப்பின்படி, அவைகளை ஆட்டி வைக்கின்றது. இப்பொழுது உமது கேள்விக்கு விடையைக் கேளும்; "வாயைத் திறந்துக்கொண்டிருக்கும் வராகத்தைக் கண்டால் உனக் கென்ன? ஒரு குற்றமும் செய்யா நாயைக் கண்டால் உனக் கென்ன? துருத்தியைப் பிடித்து ஒருவன் ஊதினால் உனக்கென்ன?" என்று நாம் கேட்டால், எப்படி அவர்களெல்லோரும், அதற்குத் தக்க நியாய மொன்றும எடுத்துரைக்க முடியாது, தங்களுக்கு வெறுப்புண்டாவதினால் அவர்கள்மீது வெறுப்பு கொள்ளும்படியான, விலக்கு

முடியாத அத்தனை வெட்கத்திற்கு ஆளாகின்றனரோ; அவ விதமே, வேறு நியாயம் சொல்ல என்னால் ஏலாது; நான் சொல்லவும் போகிற தில்லை. எனக்கு நஷ்டம் வரும்படியாக இவ்வழக்கை அவர்மீது நான் விடாது தொடர்வதற்குக் காரணம் அந்தநாதர்மீ தெனக் கிருக்கும் துவேஷமே; என் மனத்தில் குடிகொண்டிருக்கும் அவர்மீதுள்ள வெறுப்பே. உமது கேள்விக்குப் பதில் பெற்றீரா?

பா. பச்சாத்தாப மில்லாத பாபியே! உனது குரூரமான கிருத்தியத்தை க்ஷமிப்பதற்குத் தக்க பதில் ஆகாதே இது.

ஷா. உனக்கு நான் பதில் சொல்லி, உன்னைத் திருப்தி செய்ய வேண்டிய நியாய மில்லை.

பா. தங்களுக்கு அன்பில்லாத பொருளை அழிக்கின்றார்களா எல்லா மனிதர்களும?

ஷா. தனக்கு அழிக்க மன மில்லாத பொருளை வெறுக்கின்றானா எவனாவது?

பா. முதற் குற்றத்திற்கே ஜன்மத் துவேஷம பாராட்டலாமா?

ஷா. என்ன! உன்னை ஒரு பாம்பு இரண்டு முறை கடிக்கவிடு வாயோ?

அ. உன்னை வேண்டுகிறேன். அவனிடத்தில் ஏன் வீண வாதத்தையாடுகிறாய்? அதைவிட, சமுத்திரக்கரையோரம சென்று சப்திக்கின்ற அலைகளை அடங்கி யிருக்கும்படி சொல்லலாம, தன குட்டிக்காக தாய ஆட்டை ஏன ஊளை யிடச செய்கிறாயென்று கோனாயிடம நியாயம கேட்கலாம, பெருங் காற்றினால மோதப்படும்பொழுது, மலைமீதுள்ள பெரு மரங் களைத் தங்களுடைய உயர்ந்த சிகரங்களைச்சலனப்படவிடாம லும் சப்திக்காமலும இருக்கும்படி கட்டளை யிடலாம; இதைபபார்க்கிலும கடினமான பொருள் உலகத்தில் இல்லை யென்று சொல்லும்படியான, இந்த மாறுபாடியின் மனத்தை இளகச்செய்ய முயல்வதைவிட, வேறு எந்த அசாத்திய

மான காரியத்தையும் செய்து முடிக்கலாம். ஆகவே உன்னை வேண்டுகிறேன்; இனி ஒன்றும் கொடுப்பதாக நீ கூறவேண்டாம், வேறு பிரயத்னம் ஒன்றும் செய்யவேண்டாம். ஆலஸ்யம் ஒன்றுமில்லாமல் அதிவிரைவினிலேயே எனக்கு நியாயம் சொல்லப்படட்டும், சமணன் தன் இச்சைப்படி நடத்தட்டும்.

பா. உனனுடைய மூவாயிரம் பொன்னுக்காக இதோ ஆறாயிரம் பொன் இருக்கிறது.

ஷா. அந்த ஆறாயிரம் பொனனில் ஒவ்வொரு பொனனையும் ஆறாக வகுத்து, அந்த ஒவ்வொரு பாகமும், ஒரு பொன்னாயிருந்தாலும், அதை நான் வாங்கிக்கொள்ளமாட்டேன்; என பத்திரத்தின்படியே நான் பெறுவேன்.

வா.அ. நீ மற்றவர்களிடம் கருணை பாராட்டாவிட்டால் மற்றவர்கள் உனனிடம் எப்படி கருணை பாராட்டுவார்கள் என்று எண்ணுகின்றாய?

ஷா. நான் தப்பிதம் ஒன்றும் செய்யாவிட்டால், மற்றவர்களுடைய கருணையை எதிர்பார்த்து அஞ்சுவானேன? உங்களிடத்தில் நீங்கள் விலைக்கு வாங்கிய எத்தனை அடிமைக்காரப் பறையர்கள் இருக்கிறார்கள்? அவர்களை உங்களுடைய ஆடுமாடுகள் கழுதைகளைப்போல உங்களுக்கு ஈனமான அடிமைத் தொழில்கள் புரியும்படி செய்கிறீர்கள்; ஏன்? நீங்கள் விலை கொடுத்து வாங்கியபடியால்; அவர்களை அடிமைத் தனத்தினின்றும் நீக்கிவிடுங்கள்; உங்கள் பெண்டு பிள்ளைகளுக்குக் கலியாணம் செய்துகொள்ளுங்கள், ஏன் அவர்கள் சுமைகளைத் தூக்கி வியர்க்கவேண்டும்? உங்களைப்போலவே அவர்களுக்கும் மிருதுவான மஞ்சங்கள் கொடுத்து, நீங்கள் உண்ணும் ருசியான உணவையே அவர்களுக்கும் கொடுக்கின்றதுதானே? என்று நான் சொல்வேனாயின், "அந்த அடிமைகளெல்லாம் எங்கள் சொந்தம்" என்று பதில் உரைப்பீர்கள், அதே மாதிரி, நானும் உங்க

ளுக்குப் பதில் சொல்லுகின்றேன். அவரிடமிருந்து நான் இப்பொழுது கேட்கும் அந்த ஒரு ராத்தல் மாம்சம் நான அதிக விலை கொடுத்து வாங்கியது, "அது என்னுடையது; அதை நான் எப்படியும் பெறவேண்டும், அதை எனக்கு நீர் கொடுக்கமாட்டேன் என்றால், உங்கள் நியாயத்தின் பவிஷ்ய மென்ன? இந்த நாட்டு மஹாராஜாவின் நியாய சட்டங்களின் பல னென்ன?—நான் நியாயம கேட்கின்றேன்; மஹாராஜா எனக்குப் பதில் சொல்லட்டும ; எனக்குக் கொடுப்பீரா, மாட்டீரா?

வா.அ. இதைத் தீர்மானிக்குமபடி நான் சொல்லி யனுப்பியிருக்கும், பல்லவராயர் என்னும நமமுடைய மந்திரி, இன்று இங்கு வராவிட்டால், எனது அதிகாரத்தால், இவ்வழக்கினை விசாரியாது நிறுத்திவிடுவேன்.

சே. மஹாராஜா, மதுரையினின்றும் அந்த மந்திரியிடமிருந்து, நிருபங்களுடன் இப்பொழுதுதான் வந்த ஒரு தூதன, வெளியே காத்துக்கொண் டிருக்கிறான்.

வா.அ. அந்த நிருபங்களை வாங்கி வா நம்மிடம் ; அந்தத் தூதனை அழை.

பா. அநந்தா! உற்சாகமா யிரு, சொல்வதைக் கேள். இன்னும தைரியத்தைக் கைவிட வேண்டியதில்லை. எனக்காக நீ ஒரு சொட்டு ரத்தத்தை இழப்பதன்முன் இந்த சமணனுக்கு என்னுடைய எலும்பு, ரத்தம், தசை, தேக முழுவதையும் கொடுக்கின்றேன், அஞ்சாதே.

அ. மந்தை ஆட்டில் மலிந்த ஆடே முதலில் பலி கொடுக்கத் தக்கது, கனிந்திருக்கும் பழமே முதலில் பூமியில் விழுகின்றது; அதுபோலவே நான்தான் மரிக்கவேண்டும். நீ உயிருடனிருந்து எனக்குக் கர்மக் கிரியைகளைச் செய்வதைவிட உனக்கு மேன்மையாம் தொழில் என்னுளது?

**நீலகேசி ஒரு நியாயவாதியின் குமாஸ்தாவைப்போல ஆண்வேடம்பூண்டு வருகிறாள்.**

வா.அ. மதுரையி லிருந்தா வருகின்றாய்? பல்லவராயரிடமிருந்தா வருகிறாய்?

நீ. ஆம, மகாராஜா. பல்லவராயர் தமமைப் பணிவதாகச்சொல்லச் சொன்னார். [ஒரு நிருபம கொடுக்கின்றாள்.]

பா. ஏன் அப்பா, உனது கத்தியை அத்தனை ஆவலோடு தீட்டுகின்றாய்?

ஷா. அதோ, வாங்கிய கடனைக் கொடுக்க வகை யில்லாத, அந்த வணிகனிடமிருநது அபராதத்தை அறுத்து எடுத்துக் கொள்ள.

கி. சண்டாளனான சமணனே! அவ்விடத்தில் தீட்டுவதைவிட, கல்லாகிய உன மனத்தில் தீட்டு, அதிககூராகும். ஆயினும, எந்த ஆயுதமும, கொலைஞனுடைய கோடாலியுங்கூட, உன னுடைய கொடிய பொறுமையைபபோல் அவ்வளவு கூருடைத்தா யிராது? என்ன பிரார்த்தனையினாலும உன் கல் மனங் கரையாதோ?

ஷா. உன் புத்தியைக் கொண்டு நீ செயயுமபடியான பிரார்த்தனையினால் அது கரையாது.

கி. பிடிவாதக்கார நாயே! நீ பித்தமபிடித்துச் சாகாயா! நீ உயிருடன் இருப்பதே தர்மத்திற்கு ஒரு நிந்தனையாகும். மிருகங்களுடைய ஆன்மாவானது மனிதர்களுடைய உடலிற்புகுகின்றது என்று சில பெரியோர்கள் கூறுவதை நம்புமபடிச் செய்கிறாய் நீ. போன ஜன்மத்தில் நீ ஒரு தொண்டனாய்ப் பிறந்திருக்கவேண்டும். மனிதர்களைக் கொன்று தின்றதற்காக அதை கழுத்திற் சுருக்கிட்டுக் கொல்ல,குரூரமான அதனுயிர் தூக்கு மரத்தினின்றும் பறந்தோடி வந்து, பாபிஷ்டியாகிய உன் தாயார் வயிற்றில் நீ இருந்தபொழுது, உன உடலிற் பிரவேசித்திருக்கவேண்டும். அதனால், பட்டினி

யால் வதங்கி பசி வெறி கொண்டு, ரத்தத்தைக் குடிக்கப பித்தங்கொண்டு திரியும குரூரமான கோனையைபபோனற குண முடையவனு யிருக்கிருய்.

ஷா. நீ இந்த மாதிரி கத்துவதினுல், என பத்திர மெனனமோ ரத்தாகப போகிற தில்லை, நீ ஏன வாய நோக வளவள வென்று கத்துகிருய அபபனே, உன புத்தியைப பத்திரப படுத்திக் கொள; இல்லாவிட்டால் சீக்கிரததில் பாழாய விடும. நியாயத்தைப பெற இங்கு நான நிற்கினறேன.

வா.அ. பல்லவராயர் அனுப்பிய இந்நிருபத்தில், இதனுடன் நியாய சாஸதிரம நனகுணாநத அதிபாலயரான விதவான ஒருவர் வருவதாக எழுதி யிருக்கின்றது. எஙகே அவர ?

நீ. அருகாமையிற காத்திருக்கினருர், அரசரது உததரவைப பெறறு உளளே வர.

வா.அ. சந்தோஷமாய் வரடடும.—உஙகளில் சிலர் சென்று மரியாதையுடன நமது சபைக்கு அழைததது வாருஙகள அவரை. இதன மத்தியில், பல்லவராயர் நிருபத்திலெழுதியிருப்பதை சபையார் அறியடடும.

நீ. [படிக்கிருன.] "மஹாராஜா அவாகள சந்நிதானத்திறகு தங்களுடைய கடிதம வந்து சேர்நதது. இச சமயம எனக்குத் தேகம மிகவும அசெளக்கியமா யிருககினறது. ஆயினும உமது கடிதம வநது எனனிடம சேர்ந்த தருணத்தில் ராமநாதபுரத்திலிருந்து எனனைக் காணபதறகாக வந்த நியாய சாஸதிரம நன குணர்ந்த வித்வா னெருவர், என பக்கத்தி லிருந்தார். அவர் பெயர் பாலதாசர். நான அவருக்கு, வணிகனை அநந்தநாதருக்கும சமணனுக்கும உண்டான வழக்கைபபறறித் தெரிவித்தேன. நாஙகளிருவருமாக அநேக நியாய சாஸதிரஙகளை வாசித்துப பார்த்தோம. இவ வழக்கைபபறறி என எண்ணததை அவருக்குத தெரிவித்திருக்கின்றேன. அதை மனத்தில் வகித்து, எனனுல் அள

விட்டுக் கூறமுடியாத அவரது கல்வியைக் கொண்டு விர்த்தி செய்து, என வேண்டுகோளுக் கிரங்கி, எனக்குப பதிலாக சந்நிதானததின் கட்டளையை நிறைவேற்ற சமுகம வந்து சேர்வார். இவர் வயதிற் சிறியவர். வயதிற் சிறியவராயி னும இத்தனை புத்தியிற் பெரியவரை நான் இதுவரையிற் கண்டில ஞதலால், அவரது இளமையானது அவர் தக்க படி மரியாதையைப பெறுவதற்கு ஒரு தடங்கலாகாதிருக்க வேணடுமெனறு நானவேண்டுகிறேன. அவரைச் சந்நிதா னததின கிருபைக்குப பாததிரஞக அனுப்புகிறேன்; விசார ணையில் அவரது புத்தியின மேன்மை நனருய வெளிப் படும."

வா. அ. கற்றுணர்ந்த பல்லவராயர் எழுதிய கடிதத்தைக் கேட்டீர் களல்லவா ?—இதோ, அவரனுபபிய வித்வான் வருகிரு ரென நினைக்கிறேன்.

நியாயவாதியின் உடையில் சரோஜினி வருகிருள்.

வாரும, வாரும; வயோதிகரான பல்லவராயரிடமிருந்தா வரு கின்றீர் ?

ச. ஆம, மஹாராஜா.

வா. அ. மிகவும சந்தோஷம். உட்காரும இவ்விடத்தில். இப்பொ ழுது இச்சபைக்கு முனபாக நியாயததிற்கு வந்திருக்கும இந்த வழக்கின விவரமெல்லாம அறிவீரா ?

ச. எலலா விவரமும் அறிந்திருக்கினறேன். இங்கே யார் அந்த வணிகர் ? யார் அந்தச சமணன ?

வா. அ. அநந்த நாதரே !—ஷாமலால்!—இருவரும முனபாக வந்து நில்லுங்கள்.

ச. ஐயா, உமது பெயர்தாஞ ஷாமலால் ?

ஷா. ஷாமலால்தான் என பெயர்.

ச. நீர் கொண்டு வந்திருக்கும வழக்கானது வெகு விந்தையான தே. ஆயினும வாணீபுரத்து நியாய சட்டத்தின்படி, நீர்

செல்லும் மார்க்கம் தவறெனத் தடுப்பதற்கு ஹேதுவில்லை. —அவரது கைக்குள் அகப்படுக்கொண்டிருக்கிறீரல்லவா நீர் ?

அ. ஆம்; அப்படித்தான் அவன் சொல்லுகிறுன்.

ச. பத்திரத்தை நீர் ஒப்புக்கொள்ளுகின்றீரா ?

அ. ஆம்.

ச. ஆனால் மாறுபாடி கருணை கூறவேண்டும்.

ஷா. எந்தக் கட்டாயத்தின் மீது நான் அப்படிச் செய்யவேண்டும் ? அதைக் கொஞ்சம் சொல்லுமெனக்கு.

ச. கசக்கிப் பிழிய ஏலாது, காருண்ய குணம்; வானத்தினின்று மிழியும் இனிய மழைநீரைப்போல் அது வையகத்தின் மீது தானுகப் பெருகுகின்றது. இரண்டு விதத்தில் அது இன்பம் தருவதாகும். அதைக் கொடுப்பவனுக்கும் இன்பத்தை யுண்டுபண்ணுகிறது, பெறுபவனுக்கும் இன்பத்தை யுண்டு பண்ணுகின்றது, அது எவ்வளவு வல்லமைச்சாலி யிடத்திருக்கின்றதோ, அவ்வளவும அதற்கு மகிமை யாம். மன்னருக்கு அவரது மகுடத்தைப்பார்க்கிலும அதிக அழகைத் தருவதாகும். அவரது செங்கோல் இவ்வுலக ஆட்சியின் திறத்தைக் காட்டும ; அவரைக் கண்டு எல்லோரும் பயப்படச் செய்கின்ற அவரது பெருமைக்கும அதிகாரத்திற்கும் அது ஓர் அறிகுறி யாகும். காருண்யமோ,இச் செங்கோலின் ஆளுகைக்கு மேலானது. அரசர்களுடைய ஹிருதயமே சிம்மாசனமாக அமர்ந்துளது. ஈசனுக்கே அது இனறியமையாக் குணமாம். ஆகவே கருணையோடு தர்மத்தை நடத்தும இந்நில உலக மன்னரது ஆளுகையானது, ஜகதீசனுடைய ஆளுகையை மிகவும் ஒத்திருக்கும, ஆகவே, ஐயா, சமணனே, நியாயப்படி நடத்தவேண்டுமென்பதே உமது கட்சியானபோதிலும். யோசியும. சரியான நியாயபபடி நமக்கு விதிப்பதானல்,நம்மில் ஒருவனும் நற்கதி யடையமாட்டான்,

நம்மீது கருணை கூறும்படி ஈசனைக் குறித்துப் பிரார்த்திக்கின்றோம் ; அந்தப் பிரார்த்தனையே மற்றவர்களிடம் நாம் கருணையுடன் நடக்கவேண்டும என்று நமக்குக் கற்பிக்கின்றது. உமது கட்சியினது நியாயத்தின் கடூரத்தைச் சற்றே தணிக்கும் பொருட்டே, இவ்வளவு தூரம் நான் எடுத்துக் கூறினது. நீர் அப்படித்தான் நடக்கவேண்டு மென்றால், பட்சபாத மில்லாத வாணிபுரத்து நியாய சட்டத்தின்படி, அதோ நிற்கும வர்த்தகருக்கு விரோதமாகத் தீர்மானிக்கவேண்டியதுதான்.

ஷை. என் கர்மத்திற்கு நான் உத்தரவாதம்! என் பத்திரத்திற் கண்ட அபராதத்தை எனக்குக் கொடுக்கும்படி நியாயம் கேட்கின்றேன்.

ச. வாங்கிய கடனைத் தீர்க்க வகை யில்லையா இவர்க்கு ?

பா. இதோ! அவருக்குப் பதிலாக இதோ அத்தொகையை மஹாராஜாவின் சந்நிதானத்தில் நான் கொடுக்கச் சித்தமா யிருக்கிறேன். இது போதாதாயின், இரு மடங்கு கொடுக்கின்றேன். அதுவும் போதாதாயின், அந்தத் தொகைக்குப் பதின் மடங்கு கொடுக்க நான் உடன்படுகின்றேன்; தவறுவேனாயின் என் கைகள், சிரசு, என் ஹிருதயத்தையே, அபராதமாகக் கொடுக்கின்றேன். இதுவும் போதாதென்றால், மூர்க்க குணமானது, சத்தியத்தை அமுத்திடப பார்ப்பது நன்றாய் விளங்கும. ஆகவே உமமை நான் மிகவும வேண்டிக்கொள்ளுகின்றேன்; ஒரு முறை நியாய சட்டத்தை உமது அதிகாரத்திற் குட்படுத்தி சற்றே மாறச் செயயும ; பெரிய நன்மை செயவதன் பொருட்டு சிறு பிழையொன் றிழையும்; எப்படியாவது இந்தப் பிசாசின் எண்ணத்தில் கல்லைப் போடும.

ச. அப்படிச் செய்ய லாகாது. ஏற்படுத்தப்பட்ட சட்டத்தை மாற்றுவதற்கு வாணிபுரத்தில் எவருக்கும அதிகாரமில்லை. ஒரு முறை இவ்வாறு தவறி நடந்தால், அதுவே ஒரு திருஷ்டாந்தமாகக் குறிக்கப்பட்டு, பிற்பாடு இதைப்போன்ற பல

தவறுகள் ராஜாங்கத்தில் நுழைந்திட இடங் கொடுக்குமது; ஆகவே அது கூடாது.

ஷா. ஆஹா! தர்மராஜாவே நியாயம் சொல்ல வந்திருக்கின்றார் ஆம், தர்மராஜாதான். ஐயா! தர்மப் பிரபு, தாம் வயதில் சிறியவராயினும் உம்மை நான் எவ்வளவு மதிக்கின்றேன்!

ச. தயவு செய்து அந்தப் பத்திரத்தைக் காட்டும், நான சற்றே பார்க்கவேண்டும்.

ஷா. நியாய சாஸ்திரம் நன் குணர்ந்த வித்வானே! இதோ இருக்கின்றது, இதோ இருக்கின்றது.

ச. ஷாம்லால், உமக்குச் சேரவேண்டிய தொகைக்கு மூன்று பங்கு கொடுக்கின்றார்கள்.

ஷா. ஐயோ! நான் சத்தியம் செய்திருக்கின்றேன்! சத்தியம் செய்திருக்கின்றேன்! எங்கள் கடவுளின் முன்பாகச் சத்தியம் செய்திருக்கின்றேன்! தப்புப் பிரமாணம் செய்த பாபத்திற்கா உடன்படுவேன் நான்? இந்த வாணீபுரம் முழுவதும் எனக்கு வருவதானாலும் செய்யேன் அங்ஙனம.

ச. ஏன் இந்தப் பத்திரம தவணை கடந்துவிட்டது. அதன் நிபந்தனைகளின் பிரகாரம் நியாயமாய் இந்தச் சமணர் இந்த வர்த்தகருடைய மாமசத்தில் ஒரு ராத்தல், ஹிருதயத்திற் கருகாமையில் வெட்டி எடுத்துக்கொள்ளலாம.—கொஞ்சம கருணை புரியும்! உமது பணத்திற்கு மூன்று பங்கு பெற்றுக் கொள்ளும; இந்தப் பத்திரத்தைக் கிழித் தெரியும்படி எனக்கு உத்திரவு கொடும.

ஷா. அதில் கண்ட ஏற்பாட்டின்படி அந்தப் பத்திரத்தின் அபராதம செலுத்தப்பட்டால், உடனே உத்திரவு கொடுக்கின்றேன். நீரோ தர்ம சாஸ்திரம் நன்று யறிந்தவராய்க் காணப் படுகிறீர். உமக்கு நியாய சட்டம் தெரியும. சட்டத்திற்குச் சரியான அர்த்தம கூறியிருக்கின்றீர். எந்த நியாய சட்டத்திற்கு நீர் ஓர் அஸ்திபாரமா யிருக்கின்றீரோ, அந்த நியாய

சட்டத்தின்மீதாணைப்படி, எனக்குத் தீர்மானம் கொடுக்கும் படி கேட்டுக்கொள்ளுகிறேன் என்னுடைய உயிரின்மீ தாணைப்படி. எந்த மனிதனுடைய வார்த்தைகளாலும் என் எண்ணத்தினின்றும் என்னை மாற்ற முடியாது என்று சத்யம செய்கிறேன். பத்திரத்தை விட்டு நான் அணுவளவும் அசையப் போகிறதில்லை.

அ. சீக்கிரத்தில் தீர்மானம செய்யும்படி மனப பூர்வமாய்க் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

ச. ஆனால் இதுதான் தீர்மானம - அவரது கத்திக் கிரையாக உமது மார்பைச் சித்தப்படுத்தவேண்டியதுதான்.

ஷா. தர்மப் பிரபு ! தர்மப் பிரபு ! என்ன கல்வியுடைய இளைஞர்!

ச. ஏனெனில் நியாய சட்டத்தின் நிஜமான கருத்திற்கு, இந்தப் பத்திரத்திற் கண்டிருக்கும அபராதமானது, முற்றிலும் ஒத்ததாகவே யிருக்கின்றது.

ஷா. அது மிகவும உண்மை ! நிஷ்பக்ஷபாதமான நியாய முணர்ந்த பிரபுவே! வயதிற் சிறியவராயினும புத்தி சூட்சுமத்தில் எவ்வளவு பெரியவரா யிருக்கின்றீர் !

ச. ஆகையினால் உமது மார்பைச் சித்தம் செய்யும.

ஷா. ஆம, மார்பை—அப்படித்தான் சொல்கிறது பத்திரமும்— சொல்ல வில்லையா தர்மப் பிரபு? "ஹிருதயத்திற்கு அருகாமையில்" — எழுதியிருக்கும பதங்கள் அவைகளே.

ச. அபபடித்தா னிருக்கிறது; திராசு சித்தமா யிருக்கின்றதா மாம்சத்தை நிறுக்க ?

ஷா. இதோ சித்தமாய் வைத்துக்கொண்டிருக்கிறேன்.

ச. ஷாம்லால், உமது செலவில் ஒரு ரண வயித்தியனைப் பக்கத்தில் ஆயத்தமா யிருக்கும்படி செய்யும், அவர் தேகத்திலுள்ள ரத்தமெல்லாம் இழந்து மரிக்காதிருக்கும்படி அவரது காயத்தைக் கட்ட.

ஷா. பத்திரத்தில் அப்படி ஏதாவது கண்டிருக்கின்றதா ?

ச. அப்படி விவரமாய் எழுதியில்லை—இல்லாவிட்டாலு மென்ன? தர்மத்திற்காவது நீர் அவ்வளவு செய்வது நல மாகும.

ஷா. அதை நான் காணேன் ; அவ்வாறு பத்திரத்தில் எழுத வில்லை.

ச. ஐயா, வர்த்தகரே, தாம் ஏதாவது சொல்லிக்கொள்ள வேண் டிய திருக்கின்றதா ?

அ. அதிக மொன்று மில்லை. எல்லாவற்றிற்கும ஆயத்தமாயத் துணிந்திருக்கின்றேன்—பானுசேனு, எனக்கு விடை கொடு. நீ நீடூழி காலம சுகமாய் வாழ்வாயாக ! உனபொருட்டு இந்த ஸ்திதிக்கு வந்தேனென்று வருத்தப்படாதே ! ஏனெனில் இவ்விஷயத்தில், சாதாரணமாக மனிதர்களுக்குக கிடைக் கும ஸ்திதியினும மேலான ஸ்திதி, அதிர்ஷடவசத்தால் எனக்குக் கிடைத்திருக்கின்றது. உலக வழக்கமோ, இள மையில் சீமான்களா யிருந்தவர்கள்,பிறகு தமது செல்வமெல் லாம் இழந்து, முதுமையில் தேக மெலிவடைந்து, வறிஞராய மனக்கவலையுடன் தமது வாழ நாட்களைக் கஷ்டத்துடன் கழிக் கச் செய்வதே யாம. அவ்வாறு நெடுநாள நான துயர மனு பவிக்காதபடி உடனே விரைவில் என் கவலையையெல்லாம ஒழிக்கின்றேன். உனது உத்தமியான பத்தினியை நான் விசாரித்ததாகச் சொல். அநந்தநாதன் மடிந்த மார்க்கத்தை அவளுக் குரை. உன்மீது நான் எவ்வளவு அன்புடைய வனு யிருந்தேன் என்று சொல். நான் மடிந்த விதத்தை யுண்மையாய்த் தெரிவி. எல்லாக் கதையும சொல்லி முடிந்த பின், பானுசேனனுக்கு ஒருகாலத்தில் உண்மையான நண் பன் ஒருவன் இருந்தானு இல்லையா என்பதை அவளே தீர்மானிக்கும்படி கேள். உனது நண்பனை இழக்கவேண்டி வருகின்றதே என்று நீ துக்கப்படாதே. உனது கடனைத் தீர்ப்பதற்காக அவன் துக்கப்படவில்லை. ஏனெனில் இந்தச் சமணன் மாத்திரம ஆழமாய் வெட்டி எடுப்பானுயின் அந்

தக் கடனை யெல்லாம என்-முழு ஹிருதயத்துடன் செலுத்தி விடுவேன்.

பா. அநந்தா ! நான் மணந்திருக்கும மனைவி எனக் கென் னுயிரி னும இனியாள. ஆயினும இவ் வுலகமும், என் னுயிரும், என உயிருக் குயிரான மனைவியும், எல்லாம் உன் உயிருக் குச் சமானமாக மதிக்கமாட்டேன். அவைகளை யெல்லாம் உன்னை மீட்கும் பொருட்டு இந்தப் பிசாசுக்கு இழக்கத் துணிவேன், பலி கொடுக்கத் துணிவேன்.

ச. உமது மனைவி உமதருகிலிருந்து நீர் இவ்வாறு கூறுவதைக் கேட்பாளாயின், அதன் பொருட்டு உமக்கு வந்தனம செய்ய மாட்டாள.

கி. எனக்கும ஒரு மனைவி யிருக்கின்ருள். அவள்மீது நான் அதிக காதல்கொண்டிருக்கிறேன் என றுஉறுதியாய்க் கூறு வேன ; ஆயினும இந்தக்ஷணம அவள் தெய்வலோகத்தி லிருந்து எந்தத் தேவதையையாவது பிரார்தித்து இந்தப பாபிஷ்டியான சமணன் பாழான மனத்தைத் திருப்பமாட் டாளா என்று கோருகிறேன்.

நா. இந்தக் கோரிக்கையை அவள முதுகின பின்னுக நீர் கூறு வது நலமாம. இல்லாவிடின் இக் கோரிக்கையானது உமது வீட்டில் கலகத்தினை விளைக்கும்.

ஷா. [ஒரு புறமாக] ஹிந்து மதத்தைச் சார்ந்த கணவர்களின குணத்தைப் பார் ! பெண்ணொருத்தி யிருக்கிருள் எனக்கு. இப்படிப்பட்ட ஹிந்து மதஸ்தன் ஒருவன் அவளுக்குப் புரு ஷனுக யிருபபதைவிட,பிணத்தைப்பிடுங்கித் தின்னும பேயே புருஷனு யிருக்க விரும்புவேன. —வீணில் கால தாமதம செய்கின்ருேம!—சீக்கிரம் தண்டனை விதிக்கும்படி கேட்டுக் கொள்கின்றேன்.

ச. அதோ இறக்கும் வர்த்தகருடைய மாம்சத்தில் ஒரு ராத்தல் உம்முடைய தாகும. சந்நிதானத்தில் உமக்கது தீர்மான மாகின்றது, சட்டமானது உமக் கதை யளிக்கின்றது.

ஷா. மகாப் பிரபு! தர்மப் பிரபு!

ச. அந்த மாமசத்தை அவரது மார்பினின்றும் நீர் வெட்டி எடுத்துக் கொள்ளவேண்டும், சட்டம் உமக் கதையளிக்கின் றது, சந்நிதானத்திலும் அப்படியே தீர்மான மாகின்றது.

ஷா. கற்றுணர்ந்த தர்மப் பிரபு!—தீர்மானமாகிவிட்டது,—வா - சித்தப்படு.

ச. கொஞ்சம பொறும். இன்னும் கொஞ்சம் இருக்கின்றது இந்தப் பத்திரமானது உமக்கு ஒரு துளி ரத்தத்தையும் கொடுக்கவில்லை. அதில் விவரமாய் எழுதியிருப்பதெல்லாம, ஒரு ராத்தல் மாம்சம்தான். ஆகவே உமது பத்திரத்தின் படி பெற்றுக்கொள்ளும, உமக்குச் சேரவேண்டிய ஒரு ராத்தல் மாம்சத்தை எடுத்துக்கொள்ளும். ஆயினும் அதை அறுத் தெடுப்பதில் ஒரு ஹிந்துவினுடைய தேகத்தினின் றும் ஒரு துளி ரத்தம் சிந்துவீராயின், உமது நிலம பொருள் எல்லாம், வாணிபுரத்துச் சட்டத்தின் பிரகாரம ராஜாங்கத்திற்கு ஜப்தியாகி விடும்.

கி. ஆ! தர்மப் பிரபு! தர்மப் பிரபு! — அடே சமனு! கவன மாய்க் கேள்.—கற்றுணர்ந்த தர்மப் பிரபு!—

ஷா. அதுவா சட்டம?

ச. நியாய சட்டத்தை நீரே பாரும்! சட்டத்தின் பிரகாரம நடக்கவேண்டுமென்று நீர் நிர்ப்பந்திப்பதால் நீர் விரும்பு வதற் கதிகமாய் சட்டத்தின் பிரகாரம் நியாயம செலுத்தப் படும், அஞ்சாதிர்.

கி. ஆ! கற்று ணர்ந்த தர்மப் பிரபு!—சமனு, கவனி.—கற்று ணர்ந்த தர்மப் பிரபு!

ஷா. ஆனால் பத்திரத்தின் தொகைக்கு மூன்று பங்கு கொடுங் கள்.—அதை ஒப்புக்கொள்ளுகிறேன். இந்த ஹிந்து பிழைத் துப் போகட்டும்.

பா. இதோ இருக்கின்றது பொன்.

ச. பொறும்!—சமணருக்கு நியாயப் பிரகாரம் நடத்தவேண்டும்—பொறும்—அவசரம் வேண்டாம்.—அந்த அபராதமன்றி வேறொன்றையும் அவர் பெறலாகாது,

கி. அடே சமணு!—தர்மப் பிரபு! கற்றுணர்ந்த தர்மப் பிரபு!

ச. ஆகவே மாம்சத்தை வெட்டியெடுத்துக்கொள்ள ஆயத்தப் படும். ஒரு துளி ரத்தமும் சிந்தக்கூடாது. அன்றியும் சரியாய் ஒரு ராத்தல் மாம்சந்தான் நீர் வெட்டி எடுத்துக் கொள்ளவேண்டும்; குறையவும் கூடாது; அதிகப்படவுங் கூடாது. ஒரு ராத்தல் மாம்சத்தைவிட, கொஞ்சமேனும், அதிகமாகவோ குறைவாகவோ வெட்டி எடுத்தாலோ-அது குண்டுமணியளவில் இருபதிலொரு பங்கு அதிகபளுவாகவோ குறைவாகவோ இருந்தபோதிலும், அல்லது திராசின் முள்ளானது ஒரு மயிரளவு - இந்தப் பக்கமாவது அந்தப் பக்கமாவது திரும்பியபோதிலும்—நீர் இறக்கவேண்டியதுதான், உமது சகல சொத்துக்களும் ராஜாங்கத்திற்கு ஜப்தி யாகவேண்டியதுதான்.

கி. ஆஹா! சமணு! தர்மராஜாவே வந்திருக்கிறார் உனக்கு நியாயம் சொல்ல! இரண்டாவது தர்மராஜா! சமணப் பேயே! அகப்பட்டது உன் குடுமி என் கையில்!

ச. சமணர் ஏன் தாமதிக்கிறார்? உமது அபராதத்தைப் பெற்றுக்கொள்ளும்.

ஷா. எனது அசலைக் கொடுத்துவிடுங்கள், நான் போகின்றேன்.

லா. இதோ சித்தமாய் வைத்திருக்கிறேன் உனக்காக, இதோ இருக்கின்றது.

ச. மஹாராஜாவின் சந்நிதானத்தில் அதை வேண்டாமென்று மறுத்திருக்கின்றார். ஆகவே அவர் பெறவேண்டியது நியாயப்படி தீர்மானமும், அவரது பத்திரத்தின் அபராதமுமே.

இ. ஆம், ஆம்! தர்மராஜா! நீர் தர்மராஜா என்பதற்குச் சந்தேகமில்லை, இரண்டாவது தர்மராஜா! இந்த மாறுபாடிக்கு யமதர்மராஜாவாக உதித்திருக்கின்றீர்! — அப்பா, சமணனே! அந்தப் பெயரை எனக்குக் கற்பித்ததற்காக உனக்கு நமஸ்காரம் செய்கிறேன்.

ஷா. என்னுடைய அசல் தொகையும் எனக்குக் கிடைக்காதா ?

ச. உனக்கு அந்த அபராதம் ஒன்றுதான் கிடைக்கும். வேறொன்றும் கிடைக்காது. அந்த அபராதத்தையும் நான் கூறியவண்ணம் பெறவேண்டும், இல்லாவிடின் உனது உயிர் போம், சமணனே.

ஷா. ஆயின் அதை அவனே வைத்துக்கொண்டு நாசமாய்ப் போகட்டும்! வீண்வார்த்தையாட இனி தாமதியேன் இங்கு.

ச. பொறு! சமணனே! சட்டத்தின் வலையில் இன்னொரு விஷயத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறாய்! அன்னியனொருவன் வாணீபுரத்துப் பிரஜைகளில் ஒருவனது உயிரைப் போக்க, நேராகவாவது சுற்று மார்க்கத்திலாவது, பிரயத்னமசெய்ததாக அவன்மீது ருசுவானால், எவனது உயிரைப் போக்க, அவன் பிரயத்னப்படுகிறானோ, அவன் அந்த அந்நியனுடைய சொத்துகளில் பாதியை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், மற்றொருபாதி ராஜாங்கத்துப்பொக்கிஷத்தைச் சேரவேண்டுமென்றும, அபபடிப்பட்ட குற்றவாளியின் உயிர் வேறெவராலும் காக்கமுடியாதபடி மஹாராஜாவின் தயைக் குட்பட்டிருக்கிறதென்றும், வாணீபுரத்து நியாய சட்டத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது, அந்த அபாயமான ஸ்திதியில் நிற்கின்றாய நீ, என்று நானுனக் குரைக்க வேண்டும், ஏனெனில், நீ கபடமார்க்கத்திலும், நேராகவும், பிரதிவாதியின் உயிரைப் போக்கப் பிரயத்னப்பட்டதாக சந்தேக மற ருசுவாயிருக்கிறது. ஆகவே நான் முன்புஎடுத்துக்

கூறியதண்டனைக் குள்ளா யிருக்கிறாய். ஆதலால், உடனே மஹாராஜாவின் பாதத்தில் விழுந்து கருணை கூறும்படி கேள்.

கி. நீ கழு வேறிச் சாக உத்தரவு கேள். அதிலும ஒரு கஷ்டமிருக்கின்றது, உனது சொத்துக்களெல்லாம ராஜாங்கத்துக்குச் சேர்ந்து போய்விட்டபடியால் உன்னிடம் கழு மரமொன்று வாங்கவும காசு கிடையாது. ஆகவே ராஜாங்கத்தின செலவிலேயே உன்னைக் கழு வேற்றவேண்டும்.

வா.அ. நமக்கும உனக்கும இருக்கின்ற குணத்தின் தாரதமயத்தை நீ அறிந்திடும பொருட்டு, நீ கேட்பதன்முன் உன்னுயிரை உனக்குக கொடுத்தேன. உனது ஆஸ்தியில் பாதி அந்த நாதரைச் சேரும. மறறொரு பாதி ராஜாங்கத்துப பொது பொக்கிஷத்தைச சேரும. நீ வணங்கி மனனிபபுக் கேடபாயாயின, கொஞசம அபராததததுடன அதை விடடுவிடினும விடுவேன்.

ச. ஆம, ராஜாங்கத்துக்குச சேரவேண்டியதை, அந்தநாதருடையதை யனறு.

ஷா. வேண்டாம, எனனுயிரையும எல்லாவறறையும எடுத்துக் கொள்ளுங்கள், அதைமாத்திரம மன்னிபபானேன் ? என வீட்டின் அஸ்திபாரத்தை எடுத்தால், என் வீட்டையே எடுத்துவிடுகிறீர்களா ! நான் எதைக் கொண்டு பிழைக்கின்றேனே அதைப பிடுங்கிக்கொண்டால், என்னுயிரையே பிடுஙகிக்கொள்கிறீர்கள !

ச. ஐயா, அந்தநாதரே, இவனுக்கு ஏதாவது நீர் தயை பாராட்டக்கூடுமா ?

கி. ஒரு கழு மரம ஒன்று, விலை யில்லாமல், வேறொன்றும கொடுக்கமுடியாது, அதுவும தர்மத்துக்காக !

அ. மஹாராஜா அவர்களும சபையோரும மனமிரஙகி ராஜாங்கத்துக்குச் சேரவேணடிய அவனது ஆஸதியில் பாதி அபராதத்தை க்ஷமித்துவிட்டால், மற்றப் பாதியை நான் உப

யோகித்து விர்த்திசெய்து, இவனது பிற்காலம், இவனது பெண்ணைக் கள்ளத்தனமாய்க் கலியாணம செயதுகொண்ட புருஷனுக்குக் கொடுப்பதாய்ச் சமமதிக்கின்றேன். ஆனால் அதற்கு இன்னும இரண்டு நிபந்தனைகளுக்கு இவன் உடன படவேண்டும.—முதலாவது, இந்தக் கிருபையைப பெறற தறகாக, உடனே இச் சமணன் ஹிந்துமதத்தைச் சேர வேண்டும; இரண்டாவது, இவன சாகுங் காலத்தில் தனக் குள்ள பொருள்களையெல்லாம் தன் பெண்ணுககும மரு மகனுக்கும தானமாகக் கொடுபபதாக ஒரு தான பத்திரம அரச சபையிலேயே, இப்பொழுதே எழுதி வைக்கவேண் டும.

வா.அ. இந்தபபடி அவன் செயயவேண்டும; இல்லாவிடின இவ னது உயிரை க்ஷமித்ததாக நான் சறறு முன்ா கூறியதை மீட்டுக்கொள்வேன்.

ச. சம்மதந்தானா, சமணா? எனனசொல்கிறாய் நீ?

ஷா. சமமதந்தான்.

ச. ராயசம, தானபத்திரம ஒன்று எழுது.

ஷா. இவவிடத்தை விட்டுப்போக எனக்கு உத்தரவுகொடுக்கும படி கேட்டுக்கொள்ளுகிறேன், எனக்குத் தேக மொன்றும சௌக்கியமாயில்லை. தான பத்திரத்தை என்னிடம பின னால் அனுப்புங்கள், நான் அதில் கையெழுத்துப போடு கிறேன்.

வா.அ. போ! ஆனால் சொன்னதைச் செய.

இ. உனக்குத் தீட்சை கொடுக்க ஒரு குருக்கள பெறுவாய். நான் நியாதிபதியா யிருந்தால் இன்னும மூன்று பெய ரைக் கொடுத்திருப்பேன்—உன்னைக் கழுவி லேற்ற.

[ஷாம்லால் போகிறான்.]

வா.அ. ஐயா, தாங்கள் அரண்மனைக்கு வந்து, இன்று என்னுடன் போஜனம் கொள்ளவேண்டும்.

ச. மஹாராஜா அவர்கள் என்னை மன்னிக்கும்படி மிகவும வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இன்றிரவே நான் மதுரைக்குப புறபபடவேண்டும் ; ஆகவே நான் உடனே புறப்படவேண்டிய அவசியம இருக்கின்றது.

வா.அ. உமக்குச் சாவகாச மில்லாதது எனக்கு மிகவும் வருத்தமா யிருக்கின்றது —அநந்தநாதரே, இவருடைய மனத்தை நீர் திர்பதி செயயவேண்டும், ஏனெனில் இவருக்கு நீர் மிக வும நன்றியறித லுடையவரா யிருக்கவேண்டுமென்று எண் ணுகிறேன்.

[வாணீபுரத்தரசன், மந்திரிகள் பரிஜனங்கள் புடைசூழப் போகி றான்.]

பா. ஐயா, நானும எனது நண்பனும் இன்று பெரும் பழியினின் றும தப்பிப பிழைத்தது உமது புத்தி சாதுர்யத்தால். ஆகவே, அதற் கீடாக, அந்தச் சமணனுக்குச் சேரவேண் டிய மூவாயிரம் பொன்னையும, நீர் மேற்கொண்ட சிரமத்திற் காக, உபசாரமாக, உமக் களிக்கின்றோம.

அ. அதற்குமேலும, இனி எக்காலத்திலும உமக்கு அன்பிலும் ஊழியத்திலும கடன் பட்டவர்களா யிருக்கின்றோம்.

ச. எவன் மனம திர்பதி யடைகின்றதோ அவன் பட்ட கஷ்டத் திறகுத் தக்க பலனைப் பெற்றவனாகிறான. எனக்கோ, உம மைக் காபபாறறியதே பெரும திர்ப்தியா யிருக்கின்றது; அதனாலே நான் பெரும பலன் பெற்றதாக மதிக்கிறேன். என் மனமானது பணத்தின்மீது இதுவரையில் நாடின தன்று. இவ விஷயத்தில் நாம மறுபடியும சந்திக்கும பொழுது, என் ஞாபக மிருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். நீஙகள் சுகமாய் நெடுநாள் வாழவீராக எனக் கோருகிறேன் ; நான் விடை பெற்றுக்கொளளு கிறேன்.

பா. ஐயா, நான் எப்படியும் உம்மைப் பலாத்காரம் செய்ய வேண்டும் இன்னும். உமது சிரமத்துக்கு—கூலியாக வல்ல—ஞாபகக் குறியாக, பரிசாக ஏதாவது எங்களிடம் பெற்றுப்போம். நான் உம்மை இரண்டு விஷயங்கள் எனக்குத் தயைசெய்யும்படி வேண்டிக்கொள்ளுகின்றேன், என்வேண்டுகோளை மறுக்க லாகாதென்றும், என்னை மன்னிக்க வேண்டுமென்றும்.

ச. நீர் என்னை மிகவும் நிர்ப்பந்திப்பதனால், அதற் குடன்படுகின்றேன், உமது கைக்குட்டையைக் கொடும். உமது ஞாபகமாக வைத்திருக்கின்றேன்—உமக் கென்மீதுள்ள பிரீதிக்கு அடையாளமாக, இந்த மோதிரத்தை எடுத்துக் கொள்ளுகின்றேன் உம்மிடமிருந்து. உம்முடைய கையை இழுத்துக் கொள்ளாதீர்? நான் வேறொன்றும் எடுத்துக் கொள்ளமாட்டேன். உமது பிரீதியில், நீர் இதை எனக்கு மறுக்கலாகாது.

பா. ஐயா, இந்த மோதிரம்—ஐயோ! இது அற்பமானது; இதை உமக்குக் கொடுத்து நான் அவமானத்துக் காளாக்கிக் கொள்ளமாட்டேன் என்னை.

ச. எனக்கு வேறொன்றும் வேண்டாம்; அதுதான் வேண்டும். இப்பொழுது நான் நினைத்துப் பார்க்கும்பொழுது, அதன் மீதுதான் நாடுகின்றது என் மனம்.

பா. இதன் விலையைவிட இதில் வேறு விசேஷ மிருக்கின்றது. தண்டோரா செய்து, வாணீபுரந்தி லுள்ள மிருந்த விலையுயர்ந்த மோதிரத்தைக் கண்டுபிடித்து, உமக்கு எப்படியும் வாங்கித் தருகின்றேன். இவ் விஷயத்தில் மாத்திரம் என்னை மன்னிக்கும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன் உம்மை.

ச. ஐயா, இப்பொழுது தெரிகின்றது எனக்கு, நீர் கொடுக்கிறேன் என்று சொல்வதில் தாராளமாய்த்தானிருக்கிறீர்; முதலில், எப்படிப் பிச்சை கேட்பது என்று கற்பித்தீர்;

இபபொழுது, பிச்சை கேட்டால் அதை எப்படி மறுப்பது என்று கற்பிக்கின்றீர் என எண்ணுகிறேன்.

பா. ஐயா, இந்த மோதிரம என் மனைவி எனக்குக் கொடுத்தது. அவள அதை என் விரலி லிட்டபொழுது, அதை நான் ஒரு காலும இழக்கவாவது, விற்கவாவது, கொடுக்கவாவது கூடாதென்று, சத்தியம செய்யுமபடிச் செயதாள.

ச. இந்தப் போக்கானது தானம கொடாம லிருக்க அநேகருக்கு உதவுகின்றது. உமது பெண்சாதி பயித்தியக்காரியா யல்லா மல், இந்த மோதிரத்தைப பெற நான் எவவளவு அருஹன் எனபதை அறிந்திருபபா ளாயின, இதை நீர் எனக்குக் கொடுத்ததற்காக உமமீது எக்காலமும துவேஷம் பாராட்ட மாட்டாள்.—சரி, நீர் சுகமா யிரும, நான் வருகிறேன்.

[சரோஜினியும், நீலகேசியும் போகிறார்கள் ]

அ. பானுசேன, அவருக்கு அந்த மோதிரத்தைக் கொடுத்து விடு. அவரது மகிமையும என் அனபும உன மனைவியின கட்டளைக்கு எதிராகச் சீர்தூக்கப் படட்டும.

பா. போ ! கிரிஜாநாதா, ஓடிப்போய அவரைப பிடித்து அவ ரிடம இந்த மோதிரத்தைக் கொடு. உன்னால் முடியுமானால அவரை அநந்தநாதா வீடடுககு அழைத்து வா. போ உடனே ! சீக்கிரம. [கிரிஜாநாதன போகிறான்.]

பா. வா. நீயும நானும அஙகே போயச் சேர்வோம. நாளைத் தினம பொழுது விடிந்தவுடன நாம மணிபுரத்துக்குப் பறந் தோடிப போவோம.—வா. அநந்தநாதா. [போகிறார்கள.]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி.

இடம்.—வாணிபுரம் ஓர் வீதி.

சரோஜினியும், நீலகேசியும் வருகிருர்கள்.

ச. சமணனுடைய வீடு எது என்று விசாரித்து, அவனிடம இந்தப் பத்திரத்தைக் கொடு, அவன் கையெழுத்து செயயட்டும் இதில். நாமின்றிரவே புறபபட்டுபபோய, நமது கணவர்கள் வருவதற்கு ஒருதினம முனபாகவே, வீடு சேரவோம. இந்தப் பத்திரம லீலாதரருக்கு மிகுந்த சந்தோஷத்தைத் தருவதாகும.

கிரிஜாநாதன் வருகிருன்.

கி. ஐயா, அம்மட்டும் உமமைக் கண்டுபிடித்தேன்! பானுசேனர் மறுபடியும் ஆலோசனை செய்து, இம் மோதிரத்தை உமக்குக் கொடுத்தனுப்பினுர்; உம்மை போஜனத்துக்குத் தயவுசெய்து வருமபடியும வேண்டுகிருர்.

ச. அது முடியாது; அவர்மோதிரத்தை நான மிகவும சந்தோஷமாய்ப் பெற்றுக் கொள்ளுகினறேன்; அதை அப்படியே அவரிடம கூறுமபடி கேட்டுக்கொள்ளுகிறேன். அன்றியும வயோதிகனை சமணன் வீட்டை இச் சிறுவனுக்கு சற்றே காண்பிக்கும்படி வேண்டுகிறேன் உமமை.

கி. அப்படியே செய்கின்றேன்.

நீ. தங்களிடம் ஒரு வார்த்தை [சரோஜினியுடன்] எனது கணவன் மோதிரத்தையும் நான் பெறப் பார்க்கின்றேன்; எப்பொழுதும கையைவிட்டுக் கழறற லாகாதெனப பிரமாணம செய்யுமபடி செய்தேனே அதை!

ச. நீ பெறுவாய், சந்தேகமில்லை! அவர்க ளிருவரும் புருஷர்களுக்கே தங்கள் மோதிரங்களைக் கொடுத்ததாக அதிகமாகச் சத்தியம் செய்வார்கள்; நாமும் அது பொய் என்று அவர்களுக்குமேல் சத்தியம்செய்து அவர்களை வெட்கப்

படச் செய்வோம.—போ புறப்படு, துரிதப்படு;—நானிருக்குமிடம் நீ அறிவாயே?

நீ. வாரும், ஐயா, வாரும்.—அந்த வீட்டை எனக்குக் கொஞ்சம காணபிக்கின்றீரா? [போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

---

# ஐந்தாம் அங்கம்.

## முதற் காட்சி

இடம்.—மணிபுரம். சரோஜினியின் வீட்டைச் சார்ந்த பூந்தோட்டம்.

லீலாதரனும், ஜலஜாவும் வருகிறார்கள்.

லீ. நிலவு மிகவும பிரகாசமாய்க் காய்கிறது! மந்தமாருதமானது, இச் செடிகளின்மீது மிருதுவாய் அலைகள் ஓசை செய்யாதபடி, சுகந்தமாய் வீசும, இத்தன்மையான ஓ ரிரவில்தான், ஸ்ரீராமா கந்தமாதனத்தின்மீதேறி இளங்கொடியாகிய சீதை காவலிலிருக்கும இலங்கையை நோக்கி, அவள பிரிவை யாறறாது பெருமூச் செறிந்தார்.

ஜ. இத்தன்மையான ஓரிரவில்தான், காதலால் வருந்திய ராதையானவள, கிருஷ்ணனைத் தேடி, எங்கும் காணாது, கால் சோர்ந்து, இடை துவண்டு, தேகம மெலிந்து, கண் மழுங்கி கவலையுற்று, கருத்தழிந்தாள்.

லீ. இத்தன்மையான ஓ ரிரவில்தான், தமயந்தியானவள், கா ரிருளில் தன்னைக கைவிட்டுப்போன காதலனை நினைந்து கண்ணீர் கலங்கக் காடெங்கும் தேடித் திரிந்தனள.

ஜ. இத் தன்மையான ஓ ரிரவில்தான், சகுந்தலையானவள மறுதினம, துஷ்யந்தனிடம போகவேண்டி தன மெல்லிய

கைகள் நோக வன மலர்களைப பறித்து மாலையாகக் கட்டிக் கொண்டிருந்தனள.

லி. இத் தன்மையான ஓரிரவில்தான, செல்வ வந்தனை சம ணன வீட்டிலிருந்து ஜலஜா, செலவாளியாகிய தன் காத லனுடன, வாணீபுரம விட்டோடி மணிபுரம வநது சேர்ந தனள.

ஜ. இத் தனமையான ஓரிரவிலதான, லீலாதரர் எனனும இளை ஞர், அவளமீது அதிக காதல்கொணடிருபபதாகச சத்தியம செய்தார். —பல உறுதிமொழிகள கூறி அவள மனத்தைக் கவர்நதார, ஆயினும அவைகளில் ஒன்றேனும உணமை யானதல்ல.

யி. இத் தனமையான ஓரிரவில்தான, அழகிய ஜலஜா, சண டைக்காரச சிறுமியைபபோல் தன காதலனமீது வீணிற பழி சுமத்த, அவன் அதை மனனித்து விட்டான.

ஜ. இமமாதிரியாக பொழுது விடியு மளவும உமக்குமேல் பேசிக்கொணடிருபபேன, வேறொருவரு மிஙகு வராவிட் டால். —அதோ கவனியும, யாரோ மனிதனுடைய கால் சப தம கேட்கிறது.

ஸ்தாவிரன் வருகிறான்.

லீ. நிசபதமான இந நிசியில் இத்தனை வேகமாக வருவது யார்?

ஸ். ஒரு நணபன.

லீ. ஒரு நண்பன் ! எந்த நண்பன ? அப்பா, நண்பா, உன் பெயரை வெளியிடுமபடி வேண்டுகிறேன்.

ஸ. என் பெயா ஸதாவிரன; எனது எஜமானி பொழுது விடியு முன இஙகே மணிபுரம வந்து சேர்வார்களென்று உமமிடம சேதி சொல்ல வந்தேன் ; தன் கணவனுடன் சுகமாய வாழ வேண்டி, வழியிலுள்ள கோயில்களி லெல்லாம தங்கிப பணிந்து பூஜை செயதுகொணடு வருகிறார்கள.

லீ. அவர்களுடன் யார் வருவது ?

ஸ. பூஜையரான ஓர் சந்நியாசி ஒருவரும், அவர்களுடைய தோழியும் தவிர, வேறொருவருமில்லை. எனது எஜமானன் திரும்பி வந்து விட்டாரா? கொஞ்சம் தயவுசெய்து சொல்லவேண்டும்.

லீ. இன்னும் அவர் வர வில்லை; அன்றியும் அவரைப்பற்றி ஒரு சேதியும் நாங்கள் கேட்டோ மில்லை.—ஜலஜா, வா, நாம உள்ளேபோய, வீட்டின எஜமானியை மரியாதையுடன் நல்வரவழைப்பதற்குத் தக்க ஏறபாடு செய்வோம,

லாவண்யன் வருகிறான்.

லா. பலே, பலே! ஹோ, ஹோ! பலே, பலே !

லீ. யார் அது கூவுகிறது ?

லா. பலே! எஜமானும எஜமானியுமாகிய லீலாதரரையும் அவரது மனைவியையும பார்த்தீரா நீர் ? பலே பலே!

லீ. அடே, உன் கூச்சலை நிறுத்து; இதோ.

லா. பலே! எங்கே ? எங்கே ?

லீ. இங்கே.

லா. அவரிடம, என் எஜமானிடமிருந்து, நிரம்ப நற் செய்தியுடனா ஒரு தபால் வந்ததாகச் சொல்லும; பொழுது விடியு முன் என எஜமான இங்கே வந்து சேர்வார். [போகிறான்.]

லீ. கண்ணே, ஜலஜா, நாம வீட்டிற்குள்ளே போயிருந்து, அவர்கள வரவை எதிர் பார்ப்போம.—ஆயினும பெரிதல்ல;-நாம ஏன உளளே போகவேண்டும;—அப்பா, தோழா, ஸ்தாவிரா வீட்டிலே, உங்கள் எஜமானி சமீபத்தில் வந்திருப்பதாகத் தெரிவிக்க வேண்டுகிறேன் உன்னை ; வாத்தியக் காரர்களை வெளியில் இங்கே அழைத்துவா.

[ஸ்தாவிரன் போகிறான்.]

இந்த உயர் நிலத்தின்மீது நிலவு என்ன சுகமாய் நித்திரை செயவதுபோ லிருக்கிறது! இங்கே நாமஉட்கார்ந்து சங்கீதத் தின் ஒலியானது மிருதுவாய நமது செவிக்குள புகச செய வோம. நிசியும நிசபதமுமே, சங்கீததிற்கு ஒரு சுருதியைப போல் மிகுந்த சுகத்தை யுண்டுபணணத் தக்கன; ஜலஜா, உட்கார் அதோ பார், ஆகாயத்தின விதானமானது ஔ ளிய அபரஞ்சியினல் இழைக்கபபட்டதுபோல் என்ன அழ காய் விளங்குகின்றது! நீ கண்கொண்டு காணும ஒவவொரு சிறிய நட்சத்திரமும, தன் நாதனை சந்திரனது காதலைப பெற, தன் இனிய குரல் கொண்டு பாடுகின்ற தென நினை. அகிலமெல்லாம அந்தச் சஙகீதம நிறைந்திருக்கின்றது. ஆயினும அழிந்திடும மண்ணுலாகிய இவவுட லென்னும ஆடையானது, நமது ஆன்மாவைக் கவர்ந்திருக்கும வரை யில், அந்தத் தெயவலோகத்துச் சங்கீதம் நமது செவிக் குப் புலபபடாது.

**வாத்தியக்காரர்கள் வருகிருர்கள்.**

ஹா! வாருங்கள, ஒரு பாட்டைப் பாடி உறங்கும மதியை விழிக்கச்செயயுஙகள்; உங்களுடைய இனிமையான ஸவரஙக ளினல், உமது எஜமானியுடைய காதைத் துளைத்து, வாத் தியத்துடன் வரவழையுங்கள அவர்களை வீட்டிறகு.

[சங்கீதம்.]

ஜ. திவ்வியமான சஙகீதம என் செவியிற்பட்டால் என மன மானது களிப் படைகிற தில்லை ஒருபொழுதும.

ஸ்ரீ. அதற்குக் காரணம, உனது ஆன்மாவானது அதிக கவனத் துடன் இருபபதேயாம; எதேச்சையாயத் திரியும மதர்த்த மிருகங்களின் மநதைதயையாவது, உடலி லூறற இரத்தக் கொழுமையினல் வெறித்தனமாயக் குதித்தும எக்காளமிட் டும உரத்த சப்தத்துடன் கனைத்தும திரியும், கைப்பழக்கப் படாத குதிரைக்குட்டிகளின் கூட்டத்தையாவது, கவனித்

துப்பார். வாத்யத்தின் கோஷமாவது, அல்லது சங்கீதத்தின் ஸ்வரமாவது அவைகளின் செவியிற் பட்டமாத்திரத்தில், உடனே சங்கீதத்தின் இனிமையான சக்தியினால், தங்கள் குரூரமான பார்வை சாந்தமான பார்வையாக மாற, அவைகள் ஒன்றையொன்று பார்த்துக்கொண்டு அசைவற நிற்பதைக் காண்பாய். ஆகவே கவியானவர், ஸ்ரீகிருஷ்ணனது குழலோசையைக் கேட்டு செடிகள் முதலியனவும், கற்களும், ஆறுகள் முதலியனவும், உருகி ஆனந்த சாகரத்தில் மூழ்கியதாக வர்ணித்திருக்கின்றார். ஏனெனில், உலகத்தில் எப்படிப்பட்ட ஜடமாயிருந்தபோதிலும், கடினமான தாயினும் எப்படிப்பட்ட மூர்க்கமான தாயினும், சங்கீதமானது தற்சமயம் அதன் குணத்தை மாற்றச்செய்கிறது. சங்கீத ஞானம் சற்றுமில்லாது மதுரமான சங்கீதத்தைக்கேட்டு மனமுருகாத மனிதன் ஒருவன் உண்டேல், அவனை ராஜத்துரோகி யென்றும், சதிகாரன் என்றும், பறித்துண்ணும் கொடியனென்றும், நாம் மதிக்கவேண்டும். அவனது உணர்ச்சியானது அரு நரகைப்போல இருண்டதாயும், அவனது ஆன்மா அந்தகாரத்தில் முழுகியதாகவும், நாம் அறியவேண்டும். அப்படிப்பட்ட மனிதனை அவ்வரக்ஷணமும் நாம் நம்பலாகாது. அதோ, சங்கீதத்தைக்கேள்.

சற்று தூரத்தில் சரோஜினியும், நீலகேசியும் வருகின்றார்கள்.

ச. அதோ, நமது கண்ணுக்குப் புலப்படுகின்ற விளக்கு எனது அறைக்குள் எரிகின்றது. அந்தச் சிறு விளக்கின் ஒளியானது எவ்வளவு தூரம் பிரகாசிக்கின்றது! இப்பாழான உலகத்தில் அவ்வாறே நெடுந்தூரம் பிரகாசிக்கின்றது ஒரு நற்செய்கை.

நா. சந்திரன் பிரகாசித்தபொழுது அந்த விளக்கை நாம் பார்க்கவில்லை.

அவ்வாறே பெரிய ஒளியானது சிறு ஒளியை மழுங்கச் செய்கிறது; ஒருமஹாராஜாவின் பிரதிநிதி அமமஹாராஜா அருகில் வருமளவுமதான் பிரகாசிக்கின்றுன மஹாராஜாவைப் போல்; அரசன் அருகில் வந்தவுடன. ஓடையானது பெரும ஆற்றில் கலந்து மறைவதேபோல், அவனது பெருமையெல்லாம அரசனுடைய தேஜஸில் ஐக்ய மாகிவிடுகிறது.— அதோ கேள ! வாத்யம !

ந. அமமா, அது உமது வீட்டில் வாசிக்கபபடும வாத்தியமே.

ச. அயலி லிருந்தால்தான் அறிகிறேன் ஒன்றின மகிமையை; இந்தச சங்கீதம பகற பொழுதைவிட, இரவில் அதிக இனிமையாயிருக்கின்றது எனறு எண்ணுகிறேன.

ந. இரவில் நிசபதமா யிருபபதால் அது அத்தனை இனிப் பாகக் கேட்கின்றது, அமமணி.

ச. நாம கவனிக்காவிட்டால, காக்கையும குயிலைபபோல் பாடுவதுதான. வானமபாடியானது பகற் காலத்தில் வாதது கள எல்லாம கத்துமபொழுது பாடினுல கோட்டானுக்குச் சமானமான சங்கீத வித்வானுக மதிக்கப்படும என எண்ணுகிறேன். ஒவவொரு விஷயமும இவவுலகத்தில் சரியான காலத்திலும சரியான இடத்திலும இருந்தால்தான தக்கபடி சோபித்து தக்க புகழ்ச்சியைப் பெறும. பொறு-ஹா! —சநதிர னிவவிடத்தில் உறங்குவதுபோல நிசபதமாய நிலவு உறஙகுகிறது ; அதற்கு நாம நித்திராபஙகம வரச் செயய லாகாது.

[வாத்யம் நின்று விடுகிறது.]

லீ. அது சரோஜினியின் குரல், அன்றேல் நான அதிக மோசம போனவனே.

ச. குருடனுனவன கடுங் குரலைக் கேட்டு, காகம என்பது போல, என்னைத:தெரிந்துகொள்கிருர் லீலாதார்.

லீ. அமமணி, வரவேண்டும, வரவேண்டும !

ச. எங்கள கணவர்கள் சௌக்கியமாய வீடு வந்துசேரவேண்டு மென்று பூசனை இயற்றிக்கொண்டிருந்தோம். எங்கள பிரார்த்தனையினுல் அது சீக்கிரம முடியுமென்று கோரு கிறேும. அவர்கள வீடு வந்து சேர்ந்து விட்டார்களா ?

லி. அமமா, இனனும அவர்கள் வந்து சேர வில்லே. ஆனுல் அவர்கள் சீக்கிரம வந்து சேர்வதாக ஒரு தூதன் முனன தாகச் செயதி கொணடுவந்திருக்கிருன்.

ச. நீலகேசி, நீ வீட்டிற்குள்ளே போய நாம் வீட்டை விட்டு வெளியே போ யிருந்ததைப்பற்றி அவர்கள் கொஞ்சமும கவனிககவேண்டிய தில்லே என்று உத்தரவு செய், எனது வேலேக்காரர்களுக் கெல்லாம—லீலாதரரே, நீரு மபபடியே : —ஜலஜா நீயு மப்படியே.

[எக்காளம் ஒன்று ஒலிக்கின்றது.]

லி. அமமா, உமது கணவர் அருகில் வந்திருக்கவேண்டும. அதோ அவா எக்காளத்தின ஒலி ! அமமணி, நாங்கள கோள் சொல்லமாட்டோம, நீர் அஞ்சவேணடியதில்லே.

ச. மலிந்த பகற பொழுதைபபோ லிருக்கிறது இன்றிரவு; பகலேவிட கொஞ்சம மஙகலா யிருக்கிறது; சூரியன சற்றே மறைந் திருக்குமபொழுது பகல் எப்படி இருக்குமோ, அபபடி யிருக்கின்றது இபபொழுது.

பானுசேனன், அநந்தநாதன், கிரிஜாநாதன்
பரிவாரங்களுடன் வருகிருர்கள்.

பா. சூரிய னில்லாத வேளேயில் நாம வெளியே நடப்போமானுல், நாகலோகத்தவர் பகலே நாம் கொண்டாடுவதாகும.

ச. நான் உமக்கு வெளிச்சம தருகின்றேன் பதிவிரதையான மனேவி தன் புருஷனுக்கு ஒரு விளக்கைப்போ லிருக்க வேண்டும. அதெல்லா மிருக்கட்டும—பிராணநாதா, நீர திரும்பி வந்தது சந்தோஷம.

பா. மிகவும சந்தோஷம. இதோ, என் நண்பர், இவர்தான் அநந்தநாதர், இவருக்கு நல் வரவு கூறுவாய. இவருக்கு நான மிகவும கடமைபபடடவனு யிருக்கின்றேன.

ச. நீர் எவவிதத்திலும அவருக்கு மிகவும கடமைபபட்டவரா யிருக்கவேண்டியது நியாயந்தான. ஏனெனில், நான் கேள விப்படுகிற பிரகாரம, அவர் உமக்காக மிகவும கடனா பட்டிருநதா ரனறே?

அ. அந்தக் கடனை யெல்லாம அவர் தீர்ததுவிட்டார்.

ச. ஐயா, தாஙகள எஙகள வீட்டிறகு வந்தது எங்கள பாககி யம. தஙகளுக்குச் செயயவேண்டிய மரியாதை வாசாவினு லன்றி வேறு வழிகளிற காணப்படவேண்டும, ஆகவே இநத மரியாதை வார்த்தைகளை மட்டுபபடச் செயகிறேன.

[கிரிஜாநாதனும் நீலகேசியும் ஒரு புறமாகப் பேசுகிறுர்கள் ]

கி. அதோ, அந்த சநதிரனமீ தாணைபபடி, சத்தியம செய கிறேன, நீ எனனை வீணுக தூஷிக்கிருய. வாஸதவத்தில், அந்த நியாயவாதியின் கணக்குப பிளளைககுக் கொடுத் தேன. நீ அதை ஹிருதயத்திற கொண்டு இவவளவு கோபித்துக் கொளகிற விஷயததில, அவன அலியாயிருக் கானு என்று கோருகிறேன.

ச. ஆ! இதற்குளளாக ஒரு சணடையா? என்ன சமாசாரம்?

கி. ஒரு சிறிய பொன்வளையம, ஒரு அறப மோதிரம் இவள் எனக்குக் கொடுத்தாள, அதைபபற்றி; "என்மீது காத லோடிரு எனனைக் கைவிடாதே" என்று பழய கதை யொன்று எழுதியிருந்தது அதன்மீதில்.

நீ. என்ன! அதில் எழுதியிருந்த கதையும அதன விலையும பறறி நீர் பேசுவானேன; நானதை உமக்குக் கொடுத்த பொழுது, நீர் சாகுமளவும அதை உமது விரலில் அணிந் திருந்து, சமாதியிலு மும்மை விட்டுப் பிரியாதிருக்கு

மெனறு நீர் பிரமாணம செயதிரா இல்லையா? எனக்காக இல்லாவிட்டாலும, நீர் செய்து கொடுத்த பிரமாணங் களின பொருட்டாவது, அதை நீர் ஜாக்கிரதையாகப் பாது காத்து வைத்திருக்க வேண்டாமா? நியாயவாதியின் கணக் கனுக்கா கொடுத்தீர்! போம போம், சுவாமியறிய அதைப் பெற்ற கணக்கனுக்கு முகத்தில் மீசையே முளையாது?

கி. இபபொழுது இல்லை, இன்னும வயதானல் மீசை முளைக் கும.

நீ. பெண் பிள்ளை ஆண் பிள்ளை யாளுல்தான் அப்படியாகும!

கி. இதோ! இந்தக் கையறிய நான ஒரு பையனுக்குத் தான் கொடுத்தேன; ஒரு மாதிரியான சிறுவன, சின்ன குட்டைப பிளளை, உன் உயரம தானிருபபான, அந்த நியாயவாதி யின் ராயசம; தானபட்ட கஷ்டத்திறகு கூலியாகவேண்டு மென்று கெஞசினன, கொடேன் என்று மறுக்க என்மனம தாளவில்லை.

ச. நீர் செய்தது தவறு; நானுமமிடம ஸ்பஷ்டமாகச் சொல்ல வேணடும. உமது மனைவி உமக்கு முதல் முதல் கொடுத்த பொருளை அவவளவு சுலபமாகக் கொடுத்து விடலாமா? அதுவும சததியம செயது உமது விரலிலிட்டது; ஆகவே ஆணையினல் ஆணியறைநததுபோல் உமது விரலை விட்டு நீஙகா திருக்கவேண்டாமா; இதோ என பிராணநாதருககு நான ஒரு மோதிரம கொடுத்திருக்கிறேன், அதை ஒரு பொழுதும விட்டுப் பிரிவதில்லை என்று அவர் பிரமாணம செயயுமபடி செயதிருக்கிறேன. இதோ இருககின்ருர்; இவ வுலகத்தி லுள்ள பொருளை யெல்லாம கொடுப்ப தானலும அதறகாக அதைக் கொடுக்க மாட்டார். அவா விரலை விட்டுக் கழற்றவு மாட்டார். அதை, என்றும அவர் பொருட்டு நான்பிரமாணம் செயவேன! ஐயா, கிரிஜா நாதரே, உமது மனைவிக்கு மிகவும் வருத்தம விளைக்கின்றீர்

கருணையின்றி; எனக் கிமமாதிரியான துயரம நேரிட்டால் பயித்திய மன்றே பிடித்துப் போம எனக்கு.

பா. [ஒரு புறமாக] பேசாமல் எனகைகயை அபபடியே வெட்டிக் கொண்டு, அந்த மோதிரத்தைக் காபபதில் அநத கையைப் பறிகொடுத்தேன் என்று சத்தியம செய்வதே நலம.

கி. பானுசேனர் தன் மோதிரத்தை, அதைப பெறுதற்கு மிகவும் அருகனை அந்த நியாயவாதி அதிகமாய வற புறுத்தி வேண்டிக் கேட்டதின பேரில அவருக்குக் கொடுத்து விட்டார்; பிறகு, எழுதுவதில் கொஞசம கஷடம எடுத்துக் கொண்ட அவருடைய ராயசக்காரனை அந்த கணக்கன, என்னுடைய மோதிரத்தைத் தரும்படி வேண்டி ஞன்; அவர்களிரண்டு பெயரும அந்த மோதிரங்களை யன்றி வேறொன்றையும வாங்கிக் கொள்ள மாட்டோம என்று பிடிவாதம் பிடித்தார்கள்.

ச. பிராணநாதா! நீர் எந்த மோதிரத்தைக் கொடுத்தீர்? என்னிட மிருந்து நீர் பெற்ற மோதிரததை யன்றே?

பா. தவறிழைத்தது மன்றி அதனுடன் பொய யொன்றும பேசுவதானல், நான் அதல்ல, எனபேன்; இதோ நீயே பார்க்கின்றயே அந்த மோதிரம் என விரலிலில்லை—போய விட்டது.

ச. கையில் மோதிரம எப்படி யில்லையோ அப்படித்தான் பொய யான உமது மனத்திலும மெயயெனபதில்லை. ஈசன் மீது ஆணைப்படி, அந்த மோதிரத்தை நான் பார்க்கு மளவும உமது படுக்கையை நான் அண்டமாட்டேன்.

நா. நானும என்னுடைய மோதிரத்தைப் பார்க்கு மளவும் உமது படுக்கையை அண்டேன்.

பா. கண்ணே! சரோஜினி! அந்த மோதிரத்தை நான் யாருக்குக் கொடுத்தேன் என்பதை நீ அறிந்திருந்தால், அந்த மோதி ரத்தை யாருக்காகக் கொடுத்தேன் என்பதை நீ அறிந்

திருந்தால, எதறகாக அந்த மோதிரத்தைக் கொடுத்தேன் என்பதையும, நான் எவ்வளவு அதிர்பதியுடன அதைக் கொடுத்தேன் எனபதையும, நீ யோசித்துப் பார்பபையாகில், இதைத்தவிர வேறென்றும வாங்கமாட்டேன், எனறு அவர் பிடிவாதம செயததை நீ கருதுவையாயின், நீ உனது கோபத்தைக் கொஞசம தணித்துக் கொளவாய்.

ச. அநத மோதிரத்தின மகிமையை நீர் அறிந்திருபபீராயின், அநத மோதிரததைக் கொடுததவள் குணத்தையாவது நீர் கொஞசம அறிந்திருபபீராயின, அதைக் காபபாறறுகிறேன் என்று நீர் கூறிய சநதியததின திறத்தையாவது அறிந் திருபபீராயின, நீா அதைக் கைவிடடிருக்கமாட்டீர்! எந்த மனிதன—அதை நாஞெரு விரதமாக அணிந்திருக்கின் றேனா, அதைக் கொடுக்க முடியாதெனறு கொஞசம உறுதி யாக அதன பொருட்டு பேசியிருபபீராயின—அது தான வேண்டுமெனறு நியாயமில்லாதபடி பலவந்தப படுத்தி யிருபபானா? நீலகேசி நான நமபவேணாடியதை எனக்குக் கறபிக்கின்ருள். என் உயிரின மீதாணைபபடி, யாரோ பெணபிளளைக்குத்தான அதை நீர் கொடுத்திருக்கின்றீர்!

பா. இல்லை, என் உயிரின் மீதாணைப்படி, அதைப பெற்றது பெண்பிளளை யல்ல, ஓர் நியாயவாதி புருஷன்; அவருக்கு நான மூவாயிரம் பொன் தருவதாகச் சொன்னேன், வேண்டாமெனறு மறுத்து அந்த மோதிரம தான் வேண்டு மெனறு கேட்டார், எனது பிரிய நண்பனது உயிரைக் காப பாற்றியவரா யிருந்த போதிலும, அவருக்கு அதை நான் கொடுக்கமாட்டேன் எனறு மறுத்து அவர் வெறுத்துச் செல்லுமபடி விட்டேன். அதன் மீது, கண்மணி! நான் என்ன சொல்வது? அநத மோதிரத்தை அவனுக்கனுபபும படி பலவந்தப படுத்தப பட்டேன்; மானமும வெட்கமும என்னை பாதித்தது, நனறியறற மனிதன் என்று பல நகைக்குமபடி, எனது நற்பெயரை நான் அவவளவு கெடுத்

துக் கொள்ள என்ருல் முடியாமற் போச்சுது. என் கண் மணியே •என்னை மன்னிப்பாய், இதோ இரவின் தீபங்களாகிய இந்த நட்சத்திரங்கள் சாட்சியாகச் சொல்கின்றேன், நீ அங்கே அருகிலிருந்திருப்பா யாயின, நியாக அந்த மோதிரத்தை அந்த புத்திமானை நியாயவாதிக்குக் கொடுக்கும படி என்னை வேண்டி யிருப்பாய்!

ச. ஆனால அந்த நியாயவாதி என் வீட்டின அருகாமையில் வராமலிருக்கட்டும எபபொழுதும; என் பொருட்டு எனறும காப்பதாக நீர் சத்தியம செய்த நான எவவளவோ ஆசை வைத்திருந்த அம்மோதிரத்தை நீர் அவருக்குக் கொடுத்துவிட்டபடியால், நானும உம்மைப்போலவே தயாள குணமுள எவளாவேன். என்னிடமுளள வஸதுக்களில் அவர் எதைக் கேட்டாலும நான மறுக்கமாட்டேன், என உடலைக் கேட்டபோதிலும கொடுதது விடுவேன். எபபடியாவது நான அவரை அறிவேன, அதறகுக் கொஞசமேனும சநதேகமிலலை. வீட்டைவிட்டு ஓரிரவும வெளியில் உறங்காதீர், ஜாக்கிரதையாக எனனைக காத்திரும. அஙஙனம நீர் செயயாது, எனனைத தனியே விடுவீராயின், இதுவரையிலும அழிந்திடா என கறபின் மீதாணைபபடி அந்த நியாயவாதியை என படுககைத் தோழனயக் கொளவேன்.

நி. நான அவருடைய கணக்கனை அங்ஙனம கொள்வேன; ஆகவே எனனை நானே காத்துக் கொளளுமபடி எனனைத் தனியே விட்டு ஏகுவதில் ஜாக்கிரதை யாயிரும.

கி. சரி, செய அபபடியே, அபபொழுது நான் அவனைக் கண்டுபிடிக்காம லிருக்குமபடிக் காப்பாற்றிக கொள்ளட்டும! கணடு பிடித்தேனே அந்த கணக்கன்கதி அதோ கதிதான

அ. ஐயோ! துர்பாக்கியனை நானன்றே இவ்வளவு சச்சரவுக்கும காரணமா யிருக்கிறேன்.

ச. ஐயா, தாஙகள் ஒனறும வருந்தபபடவேண்டாம, உமது நல வரவு இதனுலொன்றும குறைபடாது.

பா. சரோஜினி, நான் கட்டாயமாயச் செய்யும்படி நேரிட்ட இக குற்றத்தை மன்னிப்பாய. இதோ இத்தனை சிநேகிதா களும கேட்கும்படி நான் உனக்கு சத்தியம் செய்கின் றேன்.—எனது உருவத்தை நான் அங்கு காணும், உனது அழகிய கண்களினமீ தாணைப்படி.—

ச. அது ஒன்றை மாத்திரம ஆலோசித்துப பாரும ! என் இரு கண்களில் அவா தன்னை இரட்டையாகக் காண்கிருர், ஒவ வொரு கணணிலும ஒவவொரு உருவமாக—இரண்டகமான உமது உயிரின்மீது ஆணை வையும, அது நம்பத்தக்க ஆணையே.

பா. இல்லை, நான சொல்வதைக் கேள் ; இப் பிழையைப் பொருத்தருள, இனிமேல் எப்பொழுதும நான் உனக்குச் செய்துகொடுத்த சத்தியத்தினின்றும் தவறுவதில்லை என்று என் ஆன்மாவின்மீது பிரமாணம் செய்கிறேன்.

அ. ஒரு முறை என துடலை அவரது கடனுக்காக ஈடு கொடுத் தேன்; அந்த உடலானது உனது பிராணநாதருடைய மோதிரத்தைப பெறறவர் வந்திராவிட்டால் இந்நேரம அதோகதியா யிருக்கும. இனி உனது நாதன உனக்குச செயத சதநியத்தினினறும தவறமாட்டார் எனறு, என் னுடைய உயிரையே ஜாமீனுகக் கொடுக்கத் துணிகிறேன மறுபடியும.

ச. சரி, நீர்தான அவருக்கு ஜாமீனுக இருக்கவேண்டும. இதைக் கொடும அவரிடம; முனபு கொடுத்ததைவிட ஜாக்கிரதை யாக இதையாவது பாதுகாக்கும்படி சொல்லும.

அ. இதோ, பானுசேனு, இதைப் பிரியாது வைத்திருப்பதாகப சத்தியம் செய.

பா. ஈசனே ! இதுதான் நான் அந்த நியாயவாதிக்கு கொடுத்த மோதிரம் !

ச. அவர் எனக்குக் கொடுத்தார். பிராணநாதா, என்னை மன்னியும. அவர் இம மோதிரத்தைகொண்டு என்னுடன இருந்தார நேற்றிரவு.

நீ. பிராணநாதா, நீரும் என்னை மன்னியும். அந்த சிறிய குட்டையான கணக்கன். நியாயவாதியின் குமாஸ்தா. இதோ இந்த மோதிரத்தை எனக்குக் கொடுத்து நேறறிரவு என்னுடன் படுத் துறஙகினர்.

கி. ஏன்! இது, வேனிற் காலத்தில், பாதைகளெல்லாம செம்மையாயிருக்கும்பொழுது அவைகளைச் செப்பனிடுவ தொக்கும. இதென்ன விதி! இதற்குள்ளாகவா நமக்கு இக்கதி வாய்க்கவேண்டும!

ச. எங்களை தூஷியாதீர் வீணில். உங்களுக்கெல்லாம் ஆச்சரியமாகத்தா னிருக்கும. இதோ ஒரு நிருப மிருக்கின்றது· அதை சாவகாசமாயப படித்துப் பாரும, அது மதுரையிலிருந்து பல்லவராயர் எழுதியது. அதனல் அந்த நியாயவாதி சரோஜினி யென்றும, நியாயவாதியின் கணக்கன அதோ நிற்கும நீலகேசி யென்றும் விளஙகும. இதோ நிறகும லீலாதரரைக் கேட்டால், நீங்கள புறப்பட்டுப்போன உடனே, நானும புறப்பட்டுப்போய, இபபொழுது சற்று முன் பாகத்தான், திருமபி வந்தேன என்று தெரிவிபபார். இன்னும நான என வீட்டிற்குள நுழையவில்லை. அநந்தநாதரே, வாரும, நீர் கோருவதைவிட அதிக சந்தோஷமான சமாசாரம உமக்கு வைத்திருக்கினறேன நான. இந்த நிருபதநை சீக்கிரம பிரித்துப் பாரும; அதனல் உமது பெருங் கபபல்களில் மூன்று அகஸ்மாத்தாய் சகல சரக்குகளுடன் துறைமுகம வந்து சேர்ந்ததாக அறிவீர்; எபபடி இந்த நிருபம எனக்குக் கிடைத்தது என்கிற ஆச்சரியமான விஷயத்தை நான் உமக்குத் தெரிவிக்கமாட்டேன்.

அ. எனக்கு பேச வாயில்லை.

பா. நியாயவாதியாக வந்தது நீயா ? உன்னை நான் கண்டு பிடிக்காமற் போனேனே !

கி. தாஙகள் தானே கணக்குப பிள்ளை? தாங்கள் தானே நேற்றிரவு என் மனைவியுடன் படுத்திருந்தவர் ?

நீ. ஆம, அதற்காக அவர்மீது நீர் கோபஙகொள்ள வேண்டிய தில்லை, ஒரு பெண ஆடவனாக மாறின லனறி.

பா. என் கண்ணுக் கினிய நியாயவாதியே ! நீர் எனது படுக் கைத் தோழனா யிரும்! நானில்லாத காலத்தில் என் மனைவி யுடன் படுத்துறங்கும.

அ. அழகிய அம்மணி, நீர் எனக்கு உயிரும் அளித்தீர். உயிர் வாழ்க்கைக்குரிய பொருளையும அளித்தீர். இந்த நிரு பத்தில் எனது கப்பல்கள் உண்மையில் பத்திரமாய துறை முகம வந்து சேர்ந்ததாகப் படித் தறிகிறேன்.

ச. என்ன லீலாதரரே, என்னுடைய கணக்குப்பிள்ளை உமக்கும நல்ல சந்தோஷத்தை யுண்டுபண்ணத்தக்க சமாசாரங்கள் கொண்டுவந்திருக்கிறார.

நீ. ஆம, அதற்கு கூலியில்லாமலே அதைக் கொடுக்கிறேன அவரிடம. செல்வ வந்தனாகிய சமணன் மறிக்கும காலத் தில், அவன வைத்துப போகும பொருள எல்லாம, உமக் கும ஜலஜாவுக்கும சேருமபடியாக இதோ இந தான பத் திரத்தின மூலமாகக் கொடுக்கிறேன்.

லீ. அழகிய வஞ்சியரே, அரை வயிற்றுக் கஞ்சி கேட்பவர் களுக்கு அமிர்தத்தை அளிக்கின்றீர்கள நீங்கள் !

ச. ஏறக்குறைய பொழுது விடியும சமய மாயிற்று. ஆயினும நடந்தேறிய இவ் விஷயங்களைப்பற்றி நீங்கள எல்லாம இன் னும நன்றாய்த் திர்ப்தியடைய வில்லையென்று நமபுகிறேன. வாருங்கள உள்ளே போவோம். நீங்கள என்னென்ன கேள்விகள் கேட்கவேண்டுமோ கேளுங்கள். நாங்கள உண மையாய் எல்லாவற்றிற்கும் பதி லுரைக்கின்றோம,

கி. அப்படியே ஆகட்டும். என் நீலகேசி சத்தியம் செய்து பதில் சொல்லவேண்டிய முதற் கேள்வி என்னவென்றால், மறு நாள் இரவு வரைக்கும் காத்திருக்க இஷ்டமா? அல்லது பொழுது விடிய இன்னும் இரண்டு மணி நேரம் இருக்கும் இப்பொழுது படுக்கப்போக இஷ்டமா; ஆயினும் பொழுது விடிந்தால், இருட்டா யிருக்கலாகாதா என்று விரும்புகிறேன் நான், நியாயவாதியின் கணக்கனுடன் படுத் துறங்கும் பொருட்டு. சரி, இனி நான் உயிர் வாழுநா ளெல்லாம், நீலகேசியின் மோதிரத்தைக் காப்பதில் நான் பயப்படுவதுபோல வேறொன்றிற்கும் அத்தனை அஞ்சிடேன்.

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.




அருட்பெருஞ்ஜோதி அச்சகம், சென்னை-1.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 24 | 15 | சுதந்தர மற்றவள் | சுதந்தரமற்றவள் |
| 30 | 15 | குதிரைக்கும் | குதிரைக்கு |
| 38 | 10 | தீவர்த்தியால் | தீவர்த்தியாள் |
| 39 | 3 | தீவிர்த்தி | தீவர்த்தி |
| 68 | 13 | சித்தரித்தவன் | சித்திரித்தவன் |
| 77 | 16-17 | ஷாம்லால், சாம்பநாதன் சிறைச்சாலைச் சேவகன் வருகிறான். | ஷாம்லால், சாம்பநாதன் அநந்தநாதன், சிறைச்சாலை சேவகன் வருகிறார்கள். |
| 112 | 10 | உன்மை | உண்மை |
| 121 | 12 | அனிந்திருக்கின்றேன் | அணிந்திருக்கின்றேன். |